Registered No. M. 1500.

NAVASAKTI

# நவசக்தி

| சந்தா விவரம் | | ரூ. அ. |
|---|---|---|
| வருட சந்தா | ... ... | 5 0 |
| ஆறுமாத சந்தா | ... ... | 3 0 |
| வெளிநாடு-வருட சந்தா | ... | 6 0 |

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

| விளம்பர விகிதம் | |
|---|---|
| பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூபா | 7 0 |
| சில்லரை விளம்பரம் 1 அங். | 0 8 |

முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்படமாட்டாது.

சிலம்பு அ — பிரபவஹு ஐப்பசிமீ உசஉ (9—11—27) புதன்கிழமை — பரல் கூ

[இற்றைக்குச் சுமார் ஈராண்டிற்கு முன்னர்த் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரால் எழுதப்பெற்ற "முருகன்" என்னும் நூல் வெளிவந்தது நேயர்கட்குத் தெரியும். இப்பொழுது அந்நூல் ஆசிரியரால் விரிவாக எழுதப்பெற்று "முருகன் அல்லது அழகு" என்னும் பெயர்தாங்கி வெளிவந் திருக்கிறது. இரண்டாம் பதிப்பில் புதுப்பொருள் பல சேர்க்கப்பட் டிருக்கின்றன. விலை ரூபா ஒன்று. விலாசம்:— "முருகவேள் புத்தகசாலை", இராயப்பேட்டை, சென்னை. அந்நூற்கண் இசைவழி பாட்டைப்பற்றிக் கூறப்பட்டுள்ள கட்டுரை வருமாறு:—]

## முருகன் அல்லது அழகு

### இசை வழிபாடு

* * * இனி இசை வழிபாட்டினமீது கருத்தைச்செலுத்துவோம். இசை வழிபாட்டை யோக வழிபாடென்றுங் கூறலாம். இசையின் பயன் எதுவோ அதுவே யோகத்தின் பயனும். யோகமாவது, புலன்கள் ஒருமைப்பட்டுக் கருவி கரணச்சேட்டை யொடுக்கிக் கூட்டும் அமைதியில், இருமை யுணர்வு கெட, அறிஞர் அகமுகத்தில் நிகழ்த்தும் ஒரு வழிபாடு, "ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை" என்றார் அப்பரேம் பெருமானாரும். "யோக: சித்த விருத்தி நிரோத:" எனப் பதஞ்சலியார் யோகம் என்னுஞ் சொற்குப் பொருள் விரித்திருத்தல் அறிக. இந்நிலையை இசையுங் கூட்டுதலால் இசையின் பயனையும் யோகத்தின் பயனையும் ஒன்றென உரைக்கிறேன்.

* * *

இசை ஞானியைச் சிறந்த யோகி என்று யான் சொல்வேன். ஈண்டு யோகம் யோகம் என்று சொல்வது, பிறவற்றில் கடவுள் இல்லையென்றும், தன்பால் மட்டுங் கடவுளுண்டு என்றுங் கருதி, எல்லாவற்றையுந் துறந்து, வழி துறையின்றி மூச்சைப் பிடித்துப் புலன்களைக் கெடுத்து, உடல் நலனுக்குக் கேடு சூழச் சிலர் கொள்ளும் போலியோகத்தை யன்றென்க. பொருளில்லாத யோக முறைகள் பல இடைக்காலத்தில் புகுந்து விட்டன. புலன்களின் திருவிளையாடல்கள் வழி யுழலாது, நெஞ்சை நிலைபெறுத்தி, அமைதியில் நின்று, ஒன்றில் ஒன்றி இருமையற அதை உன்னுவது யோகம். இந்நிலையை ஒவ்வொருவரும் அவரவர் இயல்பிற்குரிய முறையில் பெறக்கூடும். புலன்களுங் கருவி கரணங்களும் ஒன்றுநிலை கூட்டும் இயல்பு இசைக்குமுண்டு. ஆகவே இசை வழிபாடுஞ் சிறந்த ஒன்றென்க.

* * *

திரையற்ற நீர்போல் சிந்தையைத் தெளிவு படுத்திக்கொண்டு, அமைதி கெழுமிய ஓரிடத்தமர்ந்து, இப்பரந்த வையத்தை உற்றுநோக்கும் ஒருவனுக்கு எல்லாம் இசை மயமாகப் புலனாகும். அந்நோக்கில் நிலைத்துத் திளைப்பத் திளைப்பஅவன் தன்னில் அவ்விசை முழங்குவதுணர்வன்; மேலும் மேலும் அவன் அந்நிலையில் படியப்படிய எல்லாவற்றிற்கு முதலாகவுள்ள அழகுப் பொருள் இசைமயமா யிருத்தலையு முணர்வன்.

* * *

எல்லாம் வல்ல மெய்ப்பொருள் உலகு உயிர்களில் பொருந்தியிருக்கிறதுஎன்று சொல்லப்படுகிறது. எங்ஙனம் அப்பொருள் பொருந்தியிருக்கிறதெனில் அஃது அவைகளுள் இசைபடப் பொருந்தி யிருக்கிறதென்க. உலகு உயிர் கடவுள் மூன்றும் இசையில் பிணிக்கப்பட்டுக் கலந்து நிற்கின்றன. இந்நிலையே அத்துவித நிலையென்று அறிஞர் கூறுப. அவ்வத்துவித நிலையும் இசை பரந்த நிலையாகும். எல்லாவற்றிற்கும் அடிப்படையாயுள்ள அழகுப் பொருள் இசை மயமாயிருக்கிறதெனில், மற்றவைகளை இசை மயமென்று சொல்லவேண்டுவதில்லை. ஆண்டவன் இசை மயத்தன் என்னும் உண்மை நந்தமிழ்ப் பெரியோர்கள் உணர்ந்து உலகிற்கு அறிவுறுத்தியிருக்கிறார்கள்.

"ஏழிசையாய் இசைப்பயனாய்
என்னுடைய தோழனுமாய்"

என்று வன்றொண்டர் தமது தோழராங் கடவுளை வழுத்தியிருத்தல் காண்க.

* * *

இசையாயிருப்பவனும் இறைவன்; இசைப் பயனா யிருப்பவனும் அவன். என்னே! இசையின் மாண்பு! இசைமயமாயுள்ள ஒன்றை இசையால் எளிதில் பெறலாமன்றோ? ஆகவே இசை வழிபாடும் இறைவனுக்கு இனியதொன்றாகும்.

* * *

இசையின் இயல்புகள் பலப்பல. அவைகளுள் ஒன்று அதாவது தலையாயது பன்மையை ஒருமைப்படுத்துவது. இசையில் இன்ப மருவுதற்குங் காரணமிதுவே. புலன்கள் ஒருமையுற்றுக் கருவி கரணங்களின் கொட்டத்தைக் குலைக்குமிடத்தில் எழுவது இசை. மற்றவிடத்தில் எழுவது வசை. இசை பாடப் புகுவோனுடைய புலன்கள் பன்மையுணர் விழந்து ஒருமையுணர்வு பெறுகின்றன. அவ்விசையைச் செவி மடுப்போனும் அந்நிலை யெய்துகிறான். பொறி புலன் கருவிகரணச் சேட்டைகளினின்றும் இசை மகனை விடுதலை செய்கிறது. அவைகளினின்றும் விடுதலையடையும் ஒருவன் பின்னை எதனுடன் இசைவன்? அவன் இன்ப அன்புப் பொருளாம் அழகுடன் இசைவன். உயிர், சார்ந்ததன் வண்ணமாயிருப்ப தொன்றாகலின், அஃது ஒன்றை விடுத்ததும் மற்றொன்றைப் பற்றல் வேண்டுமென்றோ?

* * *

இவ்வாறு இசைஞானி சேட்டைகளினின்றும் விடுதலை யடைந்து இன்ப அன்பில் இசைதலரல், அவ்வன்பை அவன் எவ்வுயிரிலுங் காண்கிறான். அந்நிலையெய்து மொருவன் எவ்வுயிர்க்காதல் தீங்கு செய்வனோ? செய்யான். எவ்வுயிரிடத்தும் இரக்கங் கொள்ளும் ஒரு பெருந்தன்மையை இசை கூட்டுகிறது. ஒருவன் உலகில் இசைப் புலவனாயிருத்தல் வேண்டும்; அல்லது இசைகேட்டு உருகு மூளத்தனா யிருத்தல் வேண்டும். இரண்டும பெறா ஒருவன் மக்கள் இனத்தில் சேர்ந்தவனல்லன். அவனால் இசைமயமாயுள்ள மன்பதைக்கே கேடு உண்டு. இசையினிமை யுணராதவன் கொலைஞனேயாவன். அவ்வாறே ஷேக்ஸ்பியர் என்னுங் கவிமன்னன் கருதுகிறான். ஆதலால் மக்கள் இன்ப வாழ்விற்கு இசை இன்றியமையாதது.

* * *

இசை இயற்கையில் பறந்து நிற்கிறது. எல்லாம் இசைமயமென்று மேலே சொல்லப்பட்டது. முனிவரர்போல அடங்கித் தலைசாய்த்து நிற்குஞ் செஞ்சாலிகள் மென்காற்றில் ஒன்றோடொன்று கொஞ்சிக் கொஞ்சி இசைபாடுகின்றன. வானுற வோங்கி வளம்பெற வளர்ந்து மழை தவழும் மூங்கில்கள் ஒன்றோடொன்று அளவளாவி இசைபாடுகின்றன. வண்டுகள் பாண் மிழற்றுகின்றன. வலம்புரிகள் சங்கீத முழக்குகின்றன. பறவைகளின் பாட்டொலியை என்னென்று பகர்வேன்! அழகிய வானம்பாடி! உன் பாட்டை என்னென்பேன்! வானத்தில் நீ இவரும்போதும், இழியும் போதும் உன்னிசை, முறையே இவர்ந்தும் (ஆரோகணம்) இழிந்தும் (அவரோகணம்) உலகிற்கூட்ட உனக்கு எவரே கற்பித்தார்? "கீதமினிய குயிலே" உன்பால் அவ்வினிமையை எவரே அமைத்தார்? குழந்தைகளின் மழலை இசைக்கு நிகருண்டோ? ஆ! ஆ! பெண் தெய்வங்களின் மொழியோ பண்மயம்! பண்மயம்! இவ்வாறு இசை இயற்கையுடன் படர்ந்து நிற்கிறது. இவ்விசையுடன் இசைவதே பாணன் இசையும்.

* * *

மக்கள் அனைவரும் பாணராகார். மக்கள் ஒலியெல்லாம் இசையாகா. என்னை? இயற்கையில் இசை ஒழுங்குபட்டே நிற்கிறது. இயற்கையின் ஒழுங்கும் அதனுடன் மருவும் இசையின் ஒழுங்குங் கருதற்பாலன. ஒழுங்குபட்ட வாழ்வுடையான் இயற்கை வழி நிற்பவனாகிறான். அவன் வாழ்வு இசையுடையதென்க. ஒழுங்குபட்ட வாழ்வில் ஒழுங்குபட்ட நடையில் ஒழுங்குபட்ட பேச்சில் இசை சுவைக்கும். ஒழுங்குபற்றி நிரை நிரையே ஒரேவிதமாக நடக்கும் போர்வீரர்கள் அணியில் இசை மணக்கும். ஒழுங்குபட்ட இடங்களிலெல்லாம் இசையுண்டு என்று சுருங்கச் சொல்லலாம். ஒழுங்கைவிடுத்து நீங்காத இசை ஒவ்வொன்றிலுங் கொண்டுள்ள உறவும் அழகின் பாற் பட்டதென்க.

* * *

இயற்கை யொழுங்கில் ஒளிரும் இசைமயமாயுள்ள அழகை அல்லது முருகை யுணர உலகில் ஒழுங்கிசை வேண்டற்பாலது. அவ்வியற்கை ஒழுங்குபற்றியே நம்முன்னோர்கள் இசையொழுங்கு வகுத்தார்கள். அதுவே இசையியல் என்பது. முத்தமிழுள் இசைத்தமிழும் ஒன்றாக அழகு செய்கிறது. அவ்வொழுங்கிசை மிடற்றின் வாயிலாகவும், நரப்புக் கருவிகள் வாயிலாகவும் வெளிப்போந்து இன்பம் பயக்கும் முறைகள் அறிஞர்களால் காணப்பட்டன.

* * *

ஒழுங்கிலா இசை வசையேயாகும். ஒழுங்குக்கு உட்பட்டதே இசை இசையாகும். புலன்கள் கருவிகரணங்கள் ஒழுங்குபட்ட வழியெழுவது இசை என்று மேலே கூறப்பட்டது ஈண்டு உன்னத்தக்கது.

* * *

ஒழுங்குபட்ட இசை தன்னைப் பாடுவோரையும் செவி மடுப்போரையும் இன்பப் பேற்றிற்குரிய ஒருமை நிலை யெய்தச் செய்தலான், அவ்விசைப்பாடு இறை வழிபாடென்று கொள்வது பொருத்தமேயாகும். உலகில் இசை வழிபாடு பெருகப்பெருக உலகில் அன்பும் இன்பும் பெருகும்.

இசை வழி ஆண்டவனை வழுத்திப் பேறு பெற்றோர் பலர். அவருள் தமிழ்நாட்டுப் பெரியோர் ஒருவரை நினைக்கிறேன். அவ்வன்பர் குழலில் இசை பாடி இறைமைப்பேறு பெற்றவர். அவரது இசை எவ்வெவ்வழியில் படர்ந்து உலகிலும் உயிரிலும் ஊடுருவிப் பாய்ந்து, முடிவில் எல்லாவற்றையுங் கடந்தமுழுமுதற் பொருளைக் கவர்ந்தது என்பதைச் சேக்கிழார் பெருமான் செவ்விய தமிழ்ப்பாடல்களாக இசைத்துள்ளார். அப்பாடல்களில் சில வருமாறு:—

"வள்ளலார் வாசிக்கு
மணித்துளைவாய் வேய்ங்குழலின்
உள்ளுறையஞ் செழுத்தாக
ஒழுகியெழு மதுரவொலி
வெள்ளநிறைந் தெவ்வுயிர்க்கு
மேலமரர் தருவிளைதேன்
தெள்ளமுதி னுடன்கலந்து
செவிவார்ப்ப தெனத்தேக்க"

"ஆனிரைக ளறுகருந்தி
அசைவிடா தணைந்தயரப்
பானுரைவாய்த் தாய்முலையிற்
பற்றுமிளங் கன்றினமுந்
தானுணவு மறந்தொழியத்
தடமருப்பின் விடைக்குலமு
மான்முதலாங் கான்விலங்கு
மயிர்முகிழ்த்து வந்தணைய"

"ஆடுமயி லினங்களுமங்
கசைவயர்ந்து மருங்கணுக
ஊடுசெவி யிசைநிறைந்த
உள்ளமொடு புள்ளினமு
மாடுபடிந் துணர்வொழிய
மருங்குதொழில் புரிந்தொழுகுங்
கூடியவன் கோவலருங்
குறைவினையின் றுறைநின்றார்"

"நலிவாரு மெலிவாரும்
உணர்வொன்றா நயத்தலினான்
மலிவாய்வெள் ளெயிற்றரவ
மயின்மீது மருண்டுவிழுஞ்
சலியாத நிலையரியுந்
தடங்கரியு முடன்சாரும்
புலிவாயின் மருங்கணையும்
புல்வாய புல்வாயும்"

"மருவியகால் விசைத்தசையா
மரங்கண்மலர்ச் சினைசலியா
கருவரைவீ ழருவிகளுங்
கான்யாறுங் கலித்தோடா
பெருமுகிலின் குலங்கள்புடை
பெயர்வொழியப் புனல்சோரா
இருவிசும்பி னிடைமுழங்கா
எழுகடலு மிடைதுளும்பா"

"இவ்வாறு நிற்பனவுஞ்
சரிப்பனவு மிசைமயமாய்
மெய்வாழும் புலன்கரண
மேவியவொன் றாயினவான்
மொய்வாச நறுங்கொன்றை
முடிச்சடையா ரடித்தொண்டர்
செவ்வாயின் மிசைவைத்த
திருக்குழல்வா சனையுருக்க"

"மெய்யன்பர் மனத்தன்பின்
விளைத்தவிசைக் குழலோசை
வையந்தன் னையுநிறைத்து
வானந்தன் வயமாக்கிப்
பொய்யன்புக் கெட்டாத
பொற்பொதுவில் நடம்புரியும்
ஐயன்றன் திருச்செவியின்
அருகணையப் பெருகியதால்"

அன்பர்களே! இசைவழிபாட்டின் பெருமையை நோக்குங்கள். இப்பாடல்களை

# பழம் பெருமையும் புது அறிவும்

## ஸர் ஜகதீச சந்திர வசுவின் உபந்நியாசம்

மைசூர் சர்வ கலாசாலைப் பட்டமளிப்பு விழாவில் ஸர் ஜகதீச சந்திரவஸு நிகழ்த்திய உபந்நியாச சாரம் வருமாறு:—

என் வாழ் நாளின் தொடக்கத்திலே, இந்தியாவின் பண்டைப் பெருமையெல்லாம் மாண்டு மறைந்துபோன பழங்கதையாகு மென்றும், அஃது இனி எந்நாளும் உயிர்த்தெழுவதற்கில்லை யென்றும் சொல்லப்பட்டதைக் கேட்டுச் செயலற்றுப் போனேன். பின்னர், எனக்கு உண்மையை உணர்த்தியது யார்? என்னை மயக்கந் தெளிவித்து ஊக்க மூட்டி எழுப்பியது எது? என்று நீங்கள் வினவலாம். நான்செய்த வேலையே எனக்குக் குருவாயிருந்தது. இடையில் ஏற்பட்ட இடையூறுகளே எனக்குச்செயல் செய்தற்கு வேண்டிய ஊக்கமளித்துவந்தன. இந்தியாவானது பரம்பரையாகப் பெற்றுச் சேமித்து வைத்துள்ள நாகரிக, அறிவச் செல்வங்களை அகழ்ந்து எடுத்துக் கொண்டாலன்றி நமது தேசியவாழ்வு புத்துயிர்பெற இயலாதென்று உணர்ந்தேன். அப்போது நமது தேசிய மறுமலர்ச்சிக்கு ஏற்படும் சக்தி அளவிட முடியாததாயிருக்கும். பழமை நமக்கு உதவி செய்யட்டும்; ஆனால் அதற்கு நாம் அடிமையாதல் வேண்டாம். பழமையைத் துணையாகக் கொண்டு புதுவாழ்வில் இறங்கல் வேண்டும்.

* * *

நமது பண்டை வாழ்வு இலட்சியங்களை நினைவூட்டிக் கொண்டு மேலே செல்வோமாக. அரசர்களின் புதல்வர்களும், சாதாரண மக்களின் புதல்வர்களும் ஒரே குருவினிடம் சரிநிகர் சமானமாய்க் கல்விபயின்று எளிய வாழ்வு நடத்த வேண்டு மென்ற ஏற்பாடு வேறெந்த நாட்டிலும் இருந்ததாக எனக்குத் தோன்றவில்லை. என்னுடைய இளமைப் பிராயத்திலே கூட என் தந்தை, நான் முதலில் சுயபாஷை கற்பிக்கும் திண்ணைப் பள்ளிக்கூடத்துக்கே செல்ல வேண்டுமென்று வற்புறுத்தினர். இதனால், காடு மேடானநிலத்தைப் பண்படுத்திக் கிளி கொஞ்சும் வளமுள்ள பிரதேசங்களாகச் செய்யும் குடியானவர்களின் குழந்தைகளுடனும், மீன் பிடிக்கும் வலைஞர்களின் மக்களுடனும் எனக்குப் பழக்கம் ஏற்பட்டது. பிற் கூறியவர்கள் பெரிய நதிகளில் வாழும் அதிசயமான பிராணிகளைப் பற்றி எனக்குக் கூறினார்கள். இவர்களுடைய சகவாசத்தினாலேயே இயற்கையினிடம் எனக்கு அளவற்ற காதல் உண்டாயிற்று. என்னுடைய தாய்மொழியிலே சிந்திக்கக் கற்றுக்கொண்டேன். இந்திய இதிகாசங்களின் மூலம் நமது பரம்பரை அறிவுச் செல்வத்தையும் பெற்றேன். நமது பண்டை இராஜநீதியின் இலட்சியங்களை அறிந்தேன். விக்ரமாதித்யனின் சபை அவனுடைய 'நவ மணி'களான ஒன்பது புதல்வர்கள் இல்லாமல் பூர்த்தியாவதில்லை என்பது எதைக் காட்டுகிறது? அக்காலத்தில் மக்கள் அரசாங்கத்தினிடம் பக்தி செலுத்தியது அதன் மிருக பலத்தை உத்தேசித்து மட்டுமன்று. சிந்தனை உலகத்திலும், அறிவு உலகத்திலும் நிலையான வெற்றிகளை அடைவதை அரசாங்கம் நோக்கமாகக் கொண்டிருந்ததே காரணம்.

* * *

பண்டைக் காலத்தில் கல்வி பரவுவதற்கு மலை, நதி, காடு முதலியவை தடையாயிருந்ததில்லை. தென்னாட்டின் கோடியிலிருந்து வடநாட்டின் எல்லை வரை ஸ்ரீ சங்கராச்சாரியார் அறிவுலகத்தில் திக்விஜயம்செய்து சென்றார். வங்காளத்துப் பண்டித மணிகள், சில ஓலைச்சுவடிகளையே தங்கள் அரும் பொக்கிஷமாக எடுத்துக்கொண்டு பெரிய இமயமலையையுங்கடந்துஅப்பால் திபேத்துக்கும், சீனத்துக்கும், இன்னும் கீழ்நாடுகளுக்கும் சென்று அறிவுச் செல்வத்தைப் பரப்பியிருக்கின்றனர். உலகத்தின் முன்னேற்றம் ஒரு சாதியாலேயே ஏற்பட்டது என்று உரிமை கொண்டாடுதல் அசத்தியமாகும்; இழிந்த மனப்பான்மையைக் காட்டுவதாகும். உலகத்தின் எல்லாப் பகுதிகளும் ஒன்றை யொன்று சார்ந்திருக்கின்றன. எனினும் விஞ்ஞானத்துறையிலும், அரசியல் சாஸ்திரத்திலும் ஏற்பட்டிருக்கும் அபிவிருத்திக்கெல்லாம் மேனாடே காரணம் என்று அறியாமையினால் புகலப் படுகிறது. உங்கள் மைசூர் இராஜ்யத்தைச் சேர்ந்த டாக்டர் பிரஜேந்திர நாத்ஸீல் எழுதிய "பண்டை இந்துக்களின் விஞ்ஞானம்" என்ற நூலினாலும், டாக்டர் சாமா சாஸ்திரி ஆராய்ந்து வெளியிட்ட கௌடில்யரின் "ஆர்த்த சாஸ்திர"த்தினாலும் இவ்வறியாமை போக்கடிக்கப்படுமென நம்புகிறேன்.

* * *

முற்காலத்தில் நம்முன்னோர் செய்திருப்பவைகளைக்கொண்டு நாம் திருப்தியடைந்து விடக்கூடாது. அத்தகைய அருங்காரியங்களைச்செய்யும் சக்தி நமக்கு இன்னும் உண்டு என்பதை நிரூபிக்கவேண்டும். எனவே, நம்மால் என்ன செய்ய முடியும், இதுவரை என்ன செய்யப்பட்டிருக்கிறது என்பதை உங்களுக்குச் சுருக்கமாகச் சொல்ல விரும்புகிறேன்.

* * *

விஞ்ஞான உண்மைகளைக் கண்டு பிடிப்பதற்கு இரண்டு முறைகள் அவசியம். ஒன்று, உள்ளத்தை ஒருமுகப்படுத்தி, ஆராயப்புகும் விஷயத்துடன் ஒன்றுபடுதல். இரண்டாவது, விஞ்ஞானக் கருவிகளின் துணைகொண்டு நுட்பமான சோதனை செய்தல். மரத்தின் இருள் சூழ்ந்த உட்புறத்தில் மறைந்திருக்கும் இயந்திர அமைப்பு எத்தகையதென்று கண்டு பிடிப்பதற்கு ஒருவன் தானே மரமாகி அதன் நுண்ணிய நாடி அடிப்பை உணருதல் வேண்டும். இது முதற்படி. பின்னர், விஞ்ஞானச் சோதனை முறைகளால் அதை ருசுப்படுத்தவேண்டும். ஆனால் இங்கேயும், மகா நுட்பமான கருவிகளைக் கண்டுபிடிப்பதற்கு மனதை ஏகாக்கிர நிலைப் படுத்த வேண்டுதல் அவசியம். மைக்ராஸ்கோப் என்னும் அணுதரிசினி கண்டுபிடிக்கப்பட்டபோது விஞ்ஞான உலகிலே ஒரு புதிய யுகம் ஆரம்பமாயிற்று. ஆனால் பொருள்களை ஐந்துகோடி மடங்கு வரை பெரிதுபடுத்திக் காட்டுவதற்கு நான் கண்டுபிடித்துள்ள கிரஸ்கோ கிராப் என்னும் காந்தக் கருவி விஞ்ஞானப் புலவர்கள் இதுவரை அறியாத ஒரு புதிய உலகத்தையே அவர்களுக்குக் காட்டியிருக்கிறது. நாம் இதுவரையில் கற்பனையிலும் கருதாத மகத்தான ஆச்சரியங்களெல்லாம் அப்புதிய உலகிலே காட்சியளிக்கின்றன. பிராணி வர்க்கத்துக்கும், தாவர வர்க்கத்துக்கும் இடையேயிருந்த மாயத்திரை திடீரென்று மறைய, வெளித் தோற்றத்துக்கு எவ்வளவோ வேற்றுமை யுள்ளனவாகக் காணப்படும் அவ்விருவர்க்கங்களிலும் உள்ள உயிர் அமைப்பு ஒன்றே என்பதைத் தெள்ளிதின் காண்கிறோம்.

* * *

தாவர உயிர் அமைப்பைக் குறித்த பழைய கொள்கைகளுக்கு இப்புதிய உண்மை அவ்வளவு மாறுபட்டதாயிருந்தபடியால், என்னுடைய கருவிகளை எவ்வளவு தூரம் நம்பலாம் என்பது குறித்து 1920ல் ஒரு விவாதம் எழுந்தது. லண்டன் விஞ்ஞான சங்கத்தின் (Royal Society) பிரபல அங்கத்தினர் சிலர் அடங்கிய ஒரு கமிட்டியார் இது குறித்து விசாரணை செய்யலானார்கள். பெயர் பெற்ற ஜடநூற் புலவர்களான லார்ட் ராலே, ஸர் வில்லியம் பிராக், பிராணி நூல் வல்லரான ஸர் வில்லியம் பேலிஸ், தாவர சாஸ்திரிகளான ஆசிரியர்கள் ஆலிவர், பிளாக்மான், இரசாயன சாஸ்திரி ஆசிரியர் போனன் ஆகிய இவர்கள் அடங்கிய மேற்படி கமிட்டியார், கிரஸ்கோகிராப் கருவியைக்கொண்டு பல சோதனைகள் செய்து பார்த்து, அக்கருவியானது உயிர்த் தசைகளின் வளர்ச்சியையும், கிளர்ச்சி, சோர்வு முதலியவற்றையும் தவறின்றிப் பதிவு செய்கிறது என்று அத்தாட்சி அளித்தார்கள். இக்கருவியும், இதுபோன்ற அசாதாரண நுட்பம் பொருந்திய பிற கருவிகளும் என்னுடைய கலாசாலையில் பயிற்சி பெற்ற இந்தியத் தொழிலாளர்களாலேயே செய்யப்பட்டன என்பதை இங்கே முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். புதிய உண்மைகளையும், கருவிகளையும் கண்டுபிடிக்கும் ஆற்றல் இந்தியர்களுக்கு இல்லை என்று சிறிதும் ஆதாரமில்லாத பழி கூறப்படும் இந்நாளில் இதை வற்புறுத்திக் கூறல் அவசியமாகும்.

* * *

இத்தகைய விஞ்ஞான ஆராய்ச்சியானது வாழ்வில் எவ்வளவு தூரம் பயன்படக் கூடுமென்று அடிக்கடி கேட்கப்படுகிறது. மின்சார அலைகளின் குணங்களை ஆராய்ச்சி செய்ததின் பயனாக, ஆகாய வெளி மூலம் சக்தியை அனுப்பி வெகு தூரத்திலுள்ள இயந்திரத்தை இயக்குவதும், மருந்துச் சுரங்கங்களில் தீ வைத்து வெடிக்கச் செய்வதும் சாத்தியமென்று 1894-ம் ஆண்டிலேயே நான் நிரூபித்துக் காட்டினேன். எங்கள் சோதனைக் கூடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட காலன் ரிசீவர் என்னும் கருவிமூலம் தூரதூரங்களுக்குக் கம்பியில்லாத் தந்திச் செய்தி அனுப்புதல் சாத்தியமாயிற்று. தாவரவர்க்க வாழ்க்கையைக் குறித்துச் சமீபத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள உண்மைகள் அவற்றின் வளர்ச்சியைத் துரிதப்படுத்தும் வழியில் பெரிது பயன்படக்கூடும். இதனால் உணவுப்பொருள் விளைவின் பெருக்கத்துக்குப் பெரும் அநுகூலம் ஏற்படலாம். இந்தியச் செடிகொடிகள் பலவற்றில் இதுவரை அறியப்படாத நோய் தீர்க்கும் குணங்கள் இருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இது மனிதவர்க்கத்துக்கு எவ்வளவு தூரம் பயன்படுமென்று சொல்லவேண்டுவதில்லை. இவ்வாறு, 'இந்தியர்கள் சக்தியற்றவர்கள்' என்ற பொல்லாத மந்திரத்தின் சக்தியினால் ஏற்பட்டிருந்த மயக்கத்தையும், செயலின்மையையும் தொலைக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது.

* * *

இந்நாட்டுச் சர்வகலாசாலைகளில் படித்துத் தேறும் மாணாக்கர்கள் விஞ்ஞான அபிவிருத்தித்துறையில் ஈடுபட வழியில்லாமல் பெரும்பாலும் சட்ட கலாசாலைகளுக்கே போக வேண்டியிருப்பதையும், இவ்விஷயத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அசட்டையையும், ஜப்பான் முதலிய நாடுகளில் அரசாங்கங்கள் மாணாக்கர்களின் பிற்கால வாழ்வில் காட்டும் கவலையையும் குறிப்பிட்டு, மைசூர் அரசாங்கம் இவ்விஷயத்தில் கவனம் காட்டத் தொடங்கியிருப்பதைப் பாராட்டி விட்டுக் கடைசியாக அறிஞர் வசு கூறியதாவது:—இங்கே கூடியிருக்கும் இளைஞர்களான மாணாக்கர்களுக்கு நான் என்ன செய்திவிடுக்கட்டும்? உங்களில் ஆண்கள் மிக உயரிய ஆண்மையையும், பெண்கள் மிக உயரிய பெண்மையையும் அடைய வேண்டுமென்பதல்லாது நான் வேறென்ன சொல்லக்கூடும்? உங்கள் தாய்நாட்டுக்கு உங்கள் சேவை மிகத் தேவையாயிருக்கும் காலத்தில் நீங்கள் பிறந்திருக்கிறீர்கள் என்பதை உணருங்கள். நாம் பரம்பரைச் செல்வமாகப் பெற்றுள்ள நாகரிகம், யுக யுகாந்திரமாக நிலைபெற்று வந்திருப்பதாகும். உங்கள் பலவீனத்தினால் அல்லது செயலின்மையால் அந்த நாகரிகத்தை அழிய விடாதேயுங்கள். மக்கட் குலத்தின் துன்பத்தை நீக்குவதற்கான இடைவிடாப் போராட்ட வாழ்வை மேற்கொள்ளுமாறு உங்கள் தாய்நாடு உங்களைக் கூவி அழைக்கிறது. அக்குரலுக்குச் செவி கொடுங்கள். மக்களின் துன்பந்துடைத்தலே க்ஷத்திரிய தர்மமாகும். உங்களில் ஒவ்வொருவரும் உண்மை க்ஷத்திரிய வீரர்களா யிருங்கள்.

* * *

பண்டை நாளில் வீர பாரத நாட்டிலே செயலுக்குச் சிறப்பளித்தார்களே யன்றிச் சோம்பேறி வாழ்வுக்கன்று. அக்காலத்தில் போர்க்களத்திலேதான் அற்புத ஞானசூரியன் உதயமானான் என்பதை நினைவு கூருங்கள். மக்கள் எல்லாருக்கும் மகிழ்ச்சி தேடித் தந்தாலன்றி நம்மில் எவனொருவனுக்கும் மகிழ்ச்சியில்லை யென்பது சத்தியம். அழியா நம்பிக்கையுடன் திடங்கொண்டு போராடுங்கள். இந்திய நாகரிகத்தில் ஏதோ அதி அற்புதமான வலிமை ஒன்று மறைந்து நிலவுகிறது என்பதை உணருங்கள். இன்றேல், நீலநதிப் பள்ளத்தாக்கிலும், அஸ்ஸிரியாவிலும், பாபிலோனியாவிலும் சிறந்தோங்கியிருந்த நாகரிகங்களெல்லாம் மடிந்து மண்ணுனதைப் பார்த்துக்கொண்டு, தான் மட்டும் அழியாமல், இப்பெரிய பாரத நாகரிகமானது முன்போலவே இன்றும் அழியா நம்பிக்கையுடன் வருங் காலத்தை எதிர்நோக்கிக் கொண்டிருத்தல் எங்ஙனம் இயலும்?

---

பார்த்துப் பார்த்து மகிழுங்கள். நிலையியற் பொருளையும் இயங்கியற் பொருளையும் ஒன்றுபடுத்திப் பின்னைத் தன்மயமாயுள்ள ஆண்டவன் பால் இசை அணைகிறது. இதன் நுட்பமென்ன? இசையாளனுக்கு எல்லாத் தத்துவங்களும் மறைந்து, அவையெல்லாஞ் சிவமாகப் போலியுமென்க. இப்பேறு நிலைகூட்டும் இசைப்பாட்டை வழிபாடாகக் கொள்ளலாமன்றே? * * *

---



---



# ஆற்றுப்படை

## திருவாளர் - வல்லை. பாலசுப்பிரமணியன் பி. ஏ. எழுதியது

—[**]—

I

• செவ்வேற்சேஎய்

சேவடி படரும் செம்ம லுள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம் புரிந்துறையுஞ்
செலவுநீ நயந்தனை யாயிற் பலவுட
னன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே.

(திருமுருகாற்றுப்படை 61—66).

ஒரு நாடு நீண்டகாலம் செங்கோலரசர்களைப் பெற்று, சுற்றுப்பக்கங்களில் உள்ள பல நாடுகளையும் தன் வயமாக்கி, சிறப்பெய்தும்போது அந்நாட்டு மக்களும் மிக்க மகிழ்வெய்தி வாழ்ந்திருப்பார்கள். அவர்கள் பல துறைகளிலும் வீறுபெற்று, தமக்கு ஒப்பாரும், மிக்காருமின்றி ஒருவித பெருமிதத்தோடு, நல்லொழுக்கமும், கொடைத் தன்மையும் கூடியவர்களாக இருப்பார்கள். அவர்கட்கு இந்நீர்மை எதுபற்றியெனின், அவர்கள் அஞ்சுவதியாதொன்று மில்லை: அஞ்ச வருவதுமில்லை. தாம் கைப்பற்றிய நாடுகளுடன் வாணிபம், மரக்கல வியாபாரம் முதலியன நிகழ்த்துவதால் அவர்கள் செல்வம் மிகப் பெருகும். தாம் வெற்றிபெற்ற குடிமக்களை ஆட்சி புரியும் ஆண்டகைகளேயொழிய, அடிமைத்தனம் புரியும் கீழ்மக்களல்லர். இங்ஙனம் எவ்வாற்றானும் சிறப்பெய்திய மக்கள் தாம் பயிலும் மொழியையும் சீர்திருத்தத் தலைப்பட்டு இயல், இசை, நாடகம் என்னும் முத்துறையிலும் தமது மொழியை யலங்கரித்து, ஊக்கத்துடனும், உற்சாகத்துடனும் தமது நாட்டையும், அதனைச் செங்கோலரசுபுரியும் தமது கொற்றவனையும் போற்றிப் புகழ்வார்கள். இத்தகைய நாட்டிலே அரசனையும் தமது செவ்விய நாட்டையும், மக்களது கொடைத்திறத்தினையும், நல்லொழுக்கத்தினையும் புகழ்ந்து பாடும் புலவர்கள், அரசர்களாலும், செல்வமிக்க சீரியமக்களாலும், பொதுமக்களாலும் போற்றப்பட்டும், ஆதரிக்கப் பெற்றும் விளங்குவார்கள்.

* * *

பற்பல காலங்களில் வெவ்வேறு நாடுகள் வீரத்தன்மையுள்ள செங்கோலரசர்களைப் பெற்று மேற்சொல்லிப் போந்த சிறப்பை யெய்தின. பதினாறும் நூற்றாண்டின் இறுதியில் எலிஸபெத் (Elizabeth) அரசியார் ஆட்சிக்குட்பட்டிருந்த இங்கிலாந்து தேசம் அத்தகைய சிறப்பை யெய்தியது. அக்காலத்து ஆங்கில மக்கள் சமயபேதமின்றி ஒற்றுமைப்பட்டு ஸ்பெயின் (Spain) தேசத்தை வென்றார்கள். தம் அரசியாரைப் பற்றி அவர்கள் மிக்க பெருமிதமடைந்திருந்தனர். அக்காலத்தே தான் உலக முழுதும் போற்றும் நாடகக் கவியான ஷேக்ஸ்பியரும் (Shakespeare) பாவில் வல்லுநரான ஸ்பென்ஸரும் (Spenser) உரை நடையில் வல்லுநரான பேகன் (Bacon) என்பாரும் உயிர் பெற்றிருந்தார்கள். அங்ஙனமே பதினான்காவது லூயி அரசர் (Louis XIV) காலத்தில் பிரான்ஸு தேசமும், குப்த அரசர்கள் காலத்தில் காளிதாஸர், பவபூதி, சூத்ரகர் முதலிய பல வடமொழிப் புலவர்கள் நிரம்பப்பெற்றிருந்த வட இந்தியாவும், ஸ்ரீகிருஷ்ண தேவராயர் காலத்தில் விஜயநகரமும் பீடுபெற்று விளங்கின. அப்புலவர்களெல்லோரும் மேற்கூறியவாறே தமது அரசருடைய கொற்றத்தையும், கீர்த்தியையும் புகழ்ந்தும் அன்னோருடைய கொடைத்திறத்தினை வியந்தும் பாடி வந்தார்கள். மற்றும் நாட்டினது வளப்பம், வாணிபச்சிறப்பு, அரண்வலி, செல்வமக்களின் கொடைத்திறம், மொழியையும் அதனில் வல்ல புலவர்களையும் ஆதரிக்கும் நீர்மை, பகைஞரது இழிதகைமை ஆகிய இன்னோரன்ன தமது நாட்டின் மாட்டு அன்பும் இறுமாப்பும் கொள்ளத்தக்க விடயங்களே அவர்கள் உள்ளக்கிளர்ச்சியும், ஆர்வமும், அன்பும் கூடிய பாக்களுக்குப் பொருள்களா யமைந்திருந்தன. மக்களெல்லோரும் தம்மையும், தமது நாட்டையும், அரசனையும் புகழ்ந்து பாடிய அப்பாக்களை ஆவலோடு படித்து வீடுகள் தோறும், தெருக்கள் தோறும், மாடங்கள் தோறும், அரங்குகள் தோறும் பாடி ஆரவாரித்தார்கள். தமது அரசனையும், மற்றும் பல மேன்மக்களையும் தாம் நிகழ்த்தும் நாடகங்களில் வருவித்தும் சிலவற்றில் அவர்களையே கதா நாயகர்களாக இருத்தியும் மகிழ்ந்தார்கள். படைவீரர் வழி நடக்கும் போதும், பகைஞரது கொற்றத்தைக் குலைக்கும்போதும் மிக்க ஆரவாரத்தோடு தமது நாட்டின் பெருமையையும் தமது தோள் வலியினையும் புகழ்ந்துபாடி பொருதல் செய்தார்கள். இளஞ்சிறார்களும் இத்தகைய பாடல்களையே தமது சிறு விளையாட்டுகளிற் பாடினார்கள்.

* * *

இத்தகைய இலக்கணமமைந்த நூற்களுக்கு, வடமொழியில் காளிதாஸர் இயற்றிய "மாளவிக அக்னிமித்திரம்" பாணர் இயற்றிய "ஹர்ஷ சரித்திரம்" தெலுங்கில் ஸ்ரீ கிருஷ்ண தேவராயரைப் பொருளாக்க் கொண்ட "கிருஷ்ணராய விஜயமு" என்பனபோன்ற இன்னும் பலவும் இலக்கியமாக அமைந்து கிடக்கின்றன. தமிழ் மொழியினும் இத்தகைய நூற்கள் அளவில வாகும். ஜயங்கொண்டாரின் கலிங்கத்துப்பரணி இத்தகைய இலக்கணம் வாய்க்கப்பெற்றதே. சங்கநூற்களிற் பெரும்பாலனவும் இத்தகையனவே. அவையிற்றையெல்லாம் வேண்டும் போது விரிப்பாம்.

* * *

தமது நாட்டின் வளங்களைப் புகழ்ந்து, தமது பாக்களால் இத்துணைச் சிறப்பு செய்த பாவல்லோர்களை அந்நாட்டு மக்கள் மிகவும் போற்றி, ஆதரித்து வந்தார்கள். பண்டைக்காலந் தொட்டு இன்று காறும், அரசர் அவைகளையே தமக்கு உறைவிடமாகக் கொண்டு அவருடைய புகழைப்பாடி வாழ்ந்துவந்த புலவர் பலர். அவ்வாறின்றி வேறு சிலர், நாடுகள் தோறும் திரிந்து ஆங்காங்கு, புலவர் பரிபாலனமும், கொடைத்திறமும் தமக்கு அணிகளாகக் கொண்டுள்ள அரசர் யாவரென்று தேடி, அவ்வரசர் அரங்குகட்குச் சென்று, அவரைப் புகழ்ந்து அவர்களால் ஆதரிக்கப்பட்டனர். இவர்களுடைய தொழில் எந்நேரமும் இதுவே. இத்தகைய பாவலர்கள் நம் தமிழ் நாட்டில் மாத்திர மல்ல; வேறு நாடுகளிலும், வெவ்வேறு காலங்களில், பற்பல அரசர்கள் அவைகளில் திகழ்ந்து வந்தார்கள். பல நூற்றாண்டுகட்கு முன் நாகரிகம் மிகச் செம்மையாய் வாய்க்கப் பெற்றிருந்த கிரீஸ் (Greece) தேசத்திலும், ரோம் (Rome) தேசத்திலும் இத்தகைய பாணர்கள் இருந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் கையில் யாழைப் போன்ற ஒருவகை நரம்புக் கருவியை (Harp) வைத்துக் கொண்டு தமது குரலோசையும், யாழோசையும் நயத்தோடு கலப்ப இனிமை பெறப் பாடினார்கள். முன்னர் கூறியவாறே நாட்டின் வளமும், அரசனின் கொற்றமும், படை வீரரின் இறுமாப்பும், அந்நாட்டுப் பண்டை அரசரின் பெருமைகளுமே அவர்கள் பாக்களுக்குப் பொருள்களா யமைந்திருந்தன. தெருக்களின் கோடிகளிலும், நாடக அரங்குகளிலும் அவர்கள் இத்தகைய பாக்களைப் பாடும்போது பல மக்கள் வந்து கூடி ஆநந்தித்து அப்புலவருக்குச் சன்மானம் கொடுப்பார்கள். படை வீரர்கள் தமது பகைஞரோடு சண்டையிடும்போது,

"என்னைமுன் னில்லன்மின் தெவ்விர் பலர்
என்னை முன்னின்று கன்னின்றவர்".

என்பனவாகப் பலபடப்பாடி வெற்றி கொண்டார்கள். ஒரு சமயம் கிரீஸ்நாட்டில் போர் நடந்தகாலத்தில் ஒரு பக்கத்துப்படை புறங்காட்டி ஓடிற்று. அப்போது முடவரான ஒரு பள்ளி ஆசிரியர் அவ்வீரர்களுக்கு அவர்கள் நாட்டின் பெருமைகளையும், அவர்களுடைய கடமைகளையும் தமது பாக்களினால் உணர்த்தி அவர்கட்கு ஊக்கம் எழுப்பி, அப்போரில் வெற்றி கொண்டார். மிக்க பெருமை வாய்ந்தவரும், உலகம் புகழும் கவித்திறம் வாய்ந்த வருமாகிய கிரீஸ் நாட்டு "ஹோமர்" (Homer) என்னும் புலவர், தமிழ்நாட்டுப் பாணர்களுக்கு ஒருசார் ஒப்பாவார். அவர் குருடராயிருந்தே, செவிப்புலன் வாயிலாகக் கேட்ட ட்ராய் (Troy) நகரில் நடந்த பெரும் போரைப்பற்றியும் (Illiad), அப்போரினின்றும் திரும்பி வந்த யுலிஸிஸ் என்னும் வீரனுடைய அதிசய அனுபவங்களைப்பற்றியும் (Odyssey) இரண்டு பெருங் காப்பியங்களாகப் பாடினார். யுலிஸிஸ் என்னும் போர்வீரன் ட்ராய் தேசத்துப் போரிலிருந்து தன் வீடு திரும்பும்போது நடுவில் அவனுடைய மரக்கலங்கவிழ, அருகிருந்த ஒரு தீவில் ஒதுக்கப்பட்டு மாறு பெயர் பூண்டு சின்னாட் கழித்தான். ஆண்டு அவ்வீரன் தன்னுடைய ஆண்மைச் செயல்களால் அந்நாட்டரசனது ஆதரவை யடைந்தான். ஒரு பகல் அவ்வீரன் அரசனோடும், மற்ற அங்கத்தினரோடும் அரசவையில் இருக்கையில் சில பாணர்கள் கையில் யாழ் வைத்துக் கொண்டு தம் எதிரில் இருப்பவன் யுலிஸிஸ் என்பதை யறியாமலே, ட்ராய் நகரத்துப் போரைப்பற்றியும், அப்போரில் யுலிஸிஸ் நிகழ்த்திய அற்புதச் செயல்களைப்பற்றியும் புகழ்ந்து பாடினார்கள். அவ்வமயம், மாறு பெயர் பூண்டிருந்த உண்மையான யுலிஸிஸ் தன் உணர்வு தப்பி, தான் அனுபவித்த இடுக்கண்களையும், தன் ஆருயிர்த் தோழர்களின் பிரிவையும், தனது இல்லத்தில் அருமை மனையாட்டியின் தனிமையையும் உன்னி உன்னிக் கண்ணீர் உகுத்தான். இதைக் கண்டவுடனே, அவையிலுள்ளோரனைவரும், தம்மெதிரிலிருப்பவன் மிகவும் புகழ் நிரம்பிய யுலிஸிஸ் என்பதை யறிந்து மகிழ் வெய்தினார்கள்.

இவ்வாறே, பண்டைக் காலத்தில் பிரான்ஸு நாட்டின் அரசரான மகா சார்லஸ் (Charles the Great) அவையிலும், ஜர்மனி நாட்டரசரான பெருமை பொருந்திய இரண்டாவது ப்ரெடரிக் (Frederick II the Great) அவையிலும், எண்ணிறந்த பாணர்கள் இருந்தார்களென்பதும், இங்கிலாந்து நாட்டரசரான முதலாவது ரிச்சர்டு (Richard I) முகம்மதியர்களை வென்று கிறித்தவ மதத்தைக் காப்பதற்காக பாலஸ்தீன நாட்டிற்குச் சென்று திரும்புகையில், வழியில் தமக்குப் பகையான ஆஸ்ட்ரியா (Austria) நாட்டின் அரசனால் சிறைப்பட்டபோது, ரிச்சர்டு மன்னரின் உயிர்த்தோழரான ப்ளாண்டல் (Blondel) என்னும் பாணர் தமக்கும் மன்னருக்குமே தெரிந்த ஓர் இசைப் பாட்டைப்பாடி, அதற்கு மன்னரும் சிறையிலிருந்தே எதிர்ப்பாட்டுப்பாட, அவ்வாற்றால் மன்னரிருக்கையைத் தெரிந்து பிறகு அவரை விடுவித்த அதிசயமும் மற்றும் பலவும் ஐரோப்பிய நாட்டு வரலாற்றைப் பயிலும் ஒவ்வொரு மாணவனும் அறிந்தவையாகும்.

* * *

அதுவன்றியும் இங்கிலாந்து நாட்டிற்கும், ஸ்காட்லந்து நாட்டிற்கும் மத்தியிலுள்ள பிரதேசங்களில் (Border lands) சில நூற்றாண்டுகட்கு முன்னர் எண்ணிறந்த பாணர்கள் இருந்தனர். இவர்களுடைய பாக்களெல்லாம் அதிக கல்வி யறிவு நிரம்பாத கீழ்மக்கட்கும் எளிதில் புலனாம்படி அத்துணைச்சுலபமாகஇருக்கின்றன.(Ballads.) இவையிற்றினை யெல்லாம் மிக்க ஊக்கத்துடனும், பொறுமையோடும் இங்கிலாந்து நாட்டு பெர்சி என்னும் குருவும் ஸ்காட்லந்து தேசத்து ஆசிரியரான ஸர் வால்டர் ஸ்காட் என்பவரும் கோவைப் படுத்தினார்கள். பல புலவர்கள் பாடிய பாக்களைக் கோவைப்படுத்தினதுமன்றி, ஸர் வால்டர் ஸ்காட், தாமேயும் அத்துறையில் எண்ணிறந்த பாக்களும் (Lay of the Last Minstrel, Lady of the Lake etc.,) உரை நூற்களும் இயற்றினார். இந்நூற்களைப் படிப்பவர்கள், மேனாட்டுப் பாணர்கள் எவ்வாறிருந்தனரென்பதும், அவர்கள் வாழ்க்கை எப்பெற்றித்தெனவும், ஓர் அழகிய கண்ணாடியிற் காண்பதுபோல் அறிவார்கள்.

* * *

நம் தமிழ் நாட்டிலும் ஆற்றுப்படைத்துறை, பாடாண்டினை இவற்றில் பல சங்கப் புலவர்கள் தமது நாட்டையும்,அவ்வக்காலங்களில் தம்மை அளியுடன் ஆதரித்த அரசர்களையும், அவர்கள் முன்னோரின் கொடைத்திறத்தையும் பலபட வியந்து பாடிய பாக்கள் பத்துப்பாட்டு, புறநானூறு முதலிய நூற்களில் பரக்கக்காணலாம்.ஆனாலும், அவர்கள் நேரிதாகப் பாடிய பாக்கள் பெரும்பான்மையும் மறப்பெனும் பகைவனால் விழுங்கப்பட்டன. சிலவே ஆங்காங்கு ஒவ்வோரிடத்தில் பருவமுதிர்ந்த ஆண்பாலாரிடத்தும் பெண்பாலாரிடத்தும் வழங்கி வருகின்றன. அவை காலமென்னும் உளியால் சிதைக்கப்பட்டமைக்குக் காரணம், அவை எழுதப்படாமையே. அவை கர்ண பரம்பரையாகவே நமக்கு வந்தனவேயொழிய, முதலிலேயே எழுதப்பட்டனவல்ல. இறையனாரகப்பொருளுக்கு நக்கீரர் எழுதிய சிறந்த உரையே முதலில் எழுதப்படாது, பல சிதைவுகளுடன் நக்கீரரது பன்னிரண்டாவது தலைமுறையிற் றோன்றிய நீலகண்டனரால் வெளியிடப்பட்டதென்றால் இப்பாணர்களது வாய்ப்பாக்கள் எவ்வாறு எழுதப்பட்டிருக்கும்? வடநாட்டில் பகழ்பெற்ற புலவரான கபீர்தாஸரது உள்ளத்தை யுருக்கும் பாட்டுகள், முதலில் பெரும்பான்மையும் எழுதப்படாமல், இஞ்ஞான்று சில பெருமக்கள் நன்முயற்சியினால், ஆங்காங்குத் திரியும் சில பைராகிகளது வாய்ப்பாட்டினின்றும் தொகுக்கப்பட்டு வருகின்றன. ஆதலால் தமிழராகிய நமது முதற்கடமை யாதெனில் தமிழ் வழங்கும் நாடெங்குஞ் சுற்றித்திரிந்து மிகப் பொறுமையோடு கோயில்களிலும், சிற்றூர்களிலும், சோற்றுச் சாலைகளிலும் உள்ள மக்கள் வாயிலாகச் சிற்சில பாக்களையும், பாட்டு வாயிலாக உள்ள கதைகளையும் ஒன்றாய்ச் சேர்ப்பதே. இவை தமிழ் நாட்டிற்கும், தமிழ் மொழி வரலாற்றிற்கும், தமிழரசர்களின் ஒளி எப்பெற்றித்தென அறிதற்கும் மிக்க நன்மை பயப்பனவாகும். இத்தகைய பாணர்களுக்கு மேனாடுகளில் அவரவர் தகுதிக்கேற்ப Bards, Rhaprodists, Minstrels, Wandering Minstrels எனப் பலவேறு பெயர்களுண்டு.

* * *

வடமொழியில் மிகச் சிறந்த காப்பியமான வால்மீகி இராமாயணமும் முதலில் பல ஆண்டுகள் வரை எழுதப்பட்டதாகத் தெரியவில்லை. வால்மீகியும் அதனை முதலில் எழுதினாரல்லர். மிக்க அழகிய சுலோகங்களினால் இராமபிரானுடைய வரலாற்றை இயற்றிய வால்மீகி முதலில் அதனை என்ன செய்வதென்று அறியவில்லை. ஆனால் கிரீஸ் தேசத்துக் கவியான ஹோமர் போன்று தாம் இயற்றிய காப்பியங்களைத் தாமே பாடாது, அவ்வமயம்தம் சார்பிலிருந்த இராமபிரானது,லவ, குச என்னு மிரு மைந்தர்க்கும் அவ்விராமாயணத்தைக் கற்பித்தார். அவ்விளஞ்சிறார்கள் தமக்கு முனிவர் கற்பித்ததைச் சுவை கெழுமிய இனிய குரலுடன் பற்பல முனிவர்களுடைய ஆசிரமங்களிலெல்லாம் பாடி, குழுமிக் கேட்போரை ஆனந்தவெள்ளத்தில் திளைக்கச் செய்தனர். பாட்டு நின்றதும், கேட்டிருந்தோர் ஒவ்வொருவரும் "அச்சோ! இச்சுலோகங்களின் வனப்பு எத்துணைச் சிறந்தது" என்பாரும், "பல்லாண்டுகட்கு முன்பு நடந்த நிகழ்ச்சிகளை நம் கண்முன் கண்ணாடி போல் காட்டும் இக்காப்பியத்தின் விழுமந்தானென்னே?" என்பாருமாயிருந்தனர். ஒரு பகல், வினை முடியுந் தருணமாதலால், அவ்விளஞ்சிறுவரும் அரசநகராகிய அயோத்திக்குக் கொணரப்பட்டனர். அந்தோ! அச்சிறுவர் தம் தந்தையரிடத்திற்குத் தாம் போவதாக அறிந்தாரல்லர். ஆண்டுத் தனிமையான அரியாசனத்தில் தம் அருமை வாழ்க்கைத் துணைவியைப் பிரிந்தும், தமக்கிரு மைந்தர்கள் உளர் என்பதை அறியாமலும், தம்மையும், பிறகு பிறரையும் வெற்றிகொண்ட இராமபிரான் தம் சகோதரர் புடையிருக்க அந்தணரும், குடிமக்களும் சூழ்ந்திருக்க வீற்றிருந்தார். அப்போது 'ஏது போற் பீடு நடை' வாய்ந்த இராமாயண சுலோகங்கள் இனிய குரல்களின் வாயிலாக வருவதைக் கேட்ட இராமர் தம்மையும் மறந்து,தம் செய்கைகளையெல்லாம் தம்முன் கொணரும் அவ்விரு சிறுவரின் அங்கங்களில், தம்முடையனவும், தமது தேவியாருடையனவுமான அங்க அடையாளங்கள் அழகு பெறப் பொருந்தியிருத்தல் கண்டு, அந்தோ! அப்பெருந்தகை தம்முடைய இடுக்கண்களை நினைந்து நினைந்து கண்ணீர் உகுத்தார்.

* * *

இனி, இப்பாணர்கள் மற்றொரு பெரு நன்மையும் செய்தார்கள். நாம் முன்பு கண்டவாறே பண்டைக் காலங்களில் நூற்கள், பெரும்பாலும் படிப்போரின்மையாலும், இற்றை ஞான்றைப்போன்று எழுதும் வசதி அக்காலத்து இன்மையாலும், எழுதப்படவில்லை. உயரிய விழுமிய கருத்துக்களைப் பலபட விரித்து விரிவுரை எழுத நம்முன்னோர்களுக்கு ஏலாமையால், அவ்விழுமிய கருத்துக்களை யெல்லாம் கேட்போர் மனதில் நன்கு பதிவனவாயுள்ள சிறு சிறு சூத்திர வடிவமாகச் செய்துவிட்டார்கள். "இல்வகை எழுத்திற் பல்வகைப் பொருளைச், செவ்வணுடியிற் செறித்தினிது விளக்கித், திட்பநுட்பஞ் சிறந்த சூத்திரங்"ட்குத் தொல்காப்பியம், இறையனாரகப்பொருட் சூத்திரங்களும், வடமொழியில் வியாஸரது வேதாந்த சூத்திரமும், பதஞ்சலியினது யோக சூத்திரங்களும் இலக்கியமாக அமையவில்லையா? மற்றும் "அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகுத்திக் குறுகத் தறித்த" ஒவ்வொரு குறட்பாவும் ஒவ்வொரு சூத்திரமென்றறிக. அநேக நூற்களெல்லாம் கன்ன பரம்பரையாகவே வந்தன. ஆகையினாற்றான், அவைகள் பிற்காலங்களில் எழுதப்பட்டபோது எழுதுவோர் தம் மனம் போனவாறு கூட்டியும், குறைத்தும், விடுத்தும், தெரியாவிடங்களில் புதிதாகச் சேர்த்தும் நம்மனோர்கட்கு அதிக இடும்பை யுண்டாக்கிவிட்டனர். அநேக இடங்களிற் பாடபேதங்களும் மயக்க உரைகளும் எழுதற்கும் இதுவே காரணம். இருக்கு முதலிய நான்கு மறைகளும் முதலில் எழுதப்படாமல் வாய்மொழியாகவே வந்தமையால் அவைகட்கு "எழுதா மறை" என்னும் பெயருண்டென்பது யாவரும் அறிவர். வேதத்துக்கு மற்றொரு பெயரான "சுருதி" என்னும் சொல்லிற்குச் செவியினால் ஒலி வடிவமாய்க் கேட்கப்படுவது என்னும் பொருளும் ஈண்டு ஆராய்ந்து நோக்கத்தக்கது. இற்றை ஞான்றும் வேத பாராயணஞ் செய்யும் அந்தணர் பலரும் தாம் ஓதும் வேத சுலோகங்களை, தம் ஆசிரியரிடம் வாய்மொழியாகக் கற்றவரேயன்றி, ஏட்டிற் படித்தாரல்லர். அவர் தம் ஆசிரியரும் அவ்வாறே. ஆதலால் அவைகள் பிற்காலத்து எழுதப்பட்டபோது, அளவிறந்த பாடபேதங்களும், உரை வேற்றுமைகளும் உளவாகி, வடமொழிப் புலவர்கள் இன்னும் இடர்ப்படுவதை யாம் கண்கூடாகக் காண்கிறோம். வால்மீகி இராமாயணமும் அவ்வாறே யென்று முன்பே கூறினோம். கிரீஸ் நாட்டுக் கவியான ஹோமர் இயற்றிய இருபெருங் காப்பியங்களும் இக்கிரமயனவே. இவ்வாறு நூற்களும், பாக்களும், எழுதப்படாமல் இடர்ப்படும்போது அவை காலமென்னும் சுறவினால் விழுங்கப்படத் தக்கனவா யிருந்தன. அவற்றை மறக்க வொட்டாது, தாம், செவி

# வேண்டும் வேள்வி

## ஸ்வாமி சித்பவாநந்தர் எழுதுவது

பண்டைக் காலத்துப் பாரதமக்கள் கடவுளை வழிபடுவதற்கு வேள்வி வேட்டலைச் சிறந்த ஏதுவாகக் கொண்டிருந்தனர். அக்காலத்தில் ஆலயங்களுக்குப் பதிலாக யாக குண்டங்கள் நாடெங்கும் நிலவி யிருந்தன. ஓமாக்கினியிலிருந்து கிளம்பிய புகை விண்ணுலகெங்கும் அளாவிச் சென்றது. அளவிட வொண்ணாப் பண்டங்களை ஆகுதியாக அக்கினியில் தேவர்களுக்குப் படைத்தார்கள். அவர்களைப் போற்றிச் செய்த ஸ்துதிகள் ஆரண்யங்களிலும் நகரங்களிலும் ஒலித்த வண்ணமா யிருந்தன. யக்ஞம் செய்வதற்கெனவே தாங்கள் மண்ணுலகிற் பிறந்திருப்பதாகக் கருதிக் கொண்டு தேவர்களை விரும்பியவாறெல்லாம் பூசித்தனர். ஏகமனதாகவும் பேருக்கத்துடனும் மக்கள் செய்த ஆராதனையை விண்ணுலகத்தவர் பிரீதியுடன் ஏற்றனர். அதற்குப் பிரதிபலனாக மாந்தர் விரும்பிய விதமே மாரி பொழிவித்தனர்; கால்நடைகள் அதிகரிக்கச் செய்தனர்; தன தானியங்கள் பெருகச்செய்தனர். அவர்களுக்கு வேண்டியவைகளையெல்லாம் கரவாது ஈந்து வந்தனர். இவ்வாறு பரஸ்பரம் உதவி புரிந்து இரு லோகத்தவரும் இன்புற்று வாழ்ந்தனர். மரணம் மறுலோகத்துக்கு மார்க்கமென்றறிந்து மக்கள் அதை அஞ்சினார்களில்லை. விண்ணுலகத்தாருடன் கூடிக்குலாவி வாழுங் காலம் வந்துவிட்டதென்று மரணத்தை இன்புடன் வரவேற்றனர். ஆகவே விதி தவறாது வேள்வி வேட்டியதன் பயனாக இகபரத்தில் நல்வாழ்வையும் உயரிய பதவிகளையும் சாலப்பெற்றுச் சீலமுடன் வாழ்ந்தனர்.

* * *

வேள்விக்கும் மக்களின் முன்னேற்றத்துக்கு முள்ள சம்பந்தத்தை ஆராயுமுன் வேள்வி இன்னதென்று அறியற்பாலது. வேள்வி, யாகம், யக்ஞம் ஆகிய இவை யாவும் ஒரே பொருளைக் குறிப்பன. இந்த யக்ஞமானது மானுட வர்க்கத்துடன் இணைபிரியாது தொன்று தொட்டுத் தொடர்ந்து வருவது. மக்களையும் யக்ஞத்தையும் ஆதியில் சிருஷ்டி செய்த பிரஜாபதி "நீங்கள் பெருகுவதற்கு இந்த யாகம் ஏதுவாயிருக்கட்டும். உங்களுடைய இஷ்டகாமியங்களைப் பூர்த்தி செய்யும் காமதேனு இதுவே" என்றார்.

* * *

யாகம் என்பது பிரஜாபதியால் துவக்கப்பட்ட பிரவிருத்திச் சக்கரம் அல்லது வினையாற்றும் முறையாகும். இதுவே காமதேனுவென்றும் அழைக்கப்படுகிறது. காமதேனுவிடத்தி லிருந்து மாந்தர் விரும்பியதெல்லாம் பெறலாம். ஆகவே வேண்டியவைகளைப் பெறுவதற்கு வேள்வி வேட்டலே ஏற்ற உபாயமாகின்றது. வெறுஞ் சடங்குகள் வேள்வி யாகா. நெருப்பை நிரம்ப வளர்த்துப் பொருள் உணராத சுலோகங்கள் சிலவற்றை உரக்கக்கூவி, நெய்யைத் தீயிற் பெய்வதாலேயே யாகம் செய்யப்பட்டதாகாது. தன்னலங் கருதியோ, அல்லது பெரும் புகழும் பெறுதற்காகவோ பொருளை மகுதியாய்ப் பெயர்த்துச் செலவிடுதல் பெரு வேள்வி யாகாது. யக்ஞத்தின் மகிமை அதைச் செய்வோனின் மனோபாவத்தை ஒட்டியிருக்கிறது. சுயநலம் எவ்வளவுக்கெவ்வளவு புறக்கணிக்கப்படுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு யாகமும் மேம்பாடடைகிறது. உலகில் பெரியாரெனப் போற்றப்படுபவர்களின் வாழ்வே இக்கொள்கைக்குப் பிரமாணமாயிருக்கிறது. அன்னார் தன்னலம் என்பதை முற்றத் துறந்ததனால் தான் அரும்பெரும் வினைகளை ஆற்றவல்லராயினர். எண்ணிறந்த மாந்தர்களின மனத்தில் அப்பெரியோர்கள் இன்றும் வதிந்து வருவதற்குக் காரணம் அவர்களது தன்னலத் தியாகமே. தூய உள்ளத்துடன், குன்றா முயற்சியுடன், பணிவுடன், அன்புடன் ஆற்றப்படும் வினைகளெல்லாம் உயர்ந்த வேள்வியாவன.

* * *

தேகம் தழைத்தோங்குவதற்கு அதன் எல்லா அங்கங்களும் தத்தம் தொழிலை உயர்வு தாழ்வு பாராட்டாது செவ்வையாய்ச் செய்து வரவேண்டும். ஒரு சிறு உறுப்பேனும் சீர்கெடுமாயின் அஃது உடல் முழுவதையும் பாதிக்கும். அதுபோலவே ஜன சமூகத்தின் நல்வாழ்வும் பல்வேறு மனப்பாங்கினர் தத்தம் கடனைத் தாம் ஆற்றலைப் பொறுத்திருக்கிறது. சாந்த வாழ்வைக் கைக்கொள்வதும், சதா தெய்வ வழிபாடு செய்தலும், கலைகள்பல புகட்டுதலும், ஒரு பான்மையோர்க்கு இயன்ற தொழில். மற்றும் சிலருக்கு அரசு புரிதலும், நாட்டை உட்புறத் தீங்குகளினின்று காப்பாற்றுதலுங்கூடும். வாணிபம், விவசாயம் முதலியன செய்வது வேறு சிலருடைய தொழில். இன்னொரு பான்மையோர் குற்றேவல் செய்ய வல்லவர்களா யிருக்கின்றனர். இவர்களனைவரும் ஜன சமுதாயத்துக்கு வேண்டியவர்களே. இவர்களில் ஒருவரேனும் தம் கடனாற்றுவிடின் நாடு நலம் பெறாது. தம்மியல்புக்கேற்ற தொழிலே ஸ்வதர்மமெனப்படும். ஒவ்வொருவரும் ஸ்வதர்மத்தைச் செய்யவேண்டுமென்பதே அறிஞர்தம் துணிபு. அவ்வாறு சிரத்தையுடன் யாவரும் தம் கடனாற்றின் நாடு மிக்க நலம் பெறுவது திண்ணம். ஸ்வதர்மத்தை திருப்பணியாகச் செய்பவன் உயர்ந்த நிலை அடைவானென்று மறைகள் ஓலமிடுகிறது.

* * *

தத்தமக்கியல்புடைய தொழிலைச் செவ்வையாய்ச் செய்வதே வேள்வியாகும். நாட்டின் வளமும் மக்களின் முயற்சியைச் சார்ந்தே யிருக்கிறது. சகலரும் சகோதரப் பான்மையுடன் ஒருவருக்கொருவர் வேற்றுமை பாராட்டாது வாழ்ந்த தங்கடனை ஆற்றிவரின் இகபரமிரண்டிலும் இன்புற்று வாழ்வரன்றோ?

* * *

அந்நாளில் ஆக்கம் மிகப் பெற்றிருந்த பாரதநாடு இந்நாளில் எங்கிக்கிடப்பதேன்? தேவர்களுக்கு விருந்தளித்தவர்களின் புதல்வர்கள் இப்போது உண்ணப்போதுமான உணவில்லாது உயிர்விடுகின்றனர். இருக்க இடமில்லாது உடுக்க உடையில்லாது அனாதைகளாகப் பரிதபிக்கின்றனர். பிணியும் அறியாமையும் ஆறத்துயரமுமே எங்கும் குடிகொண்டிருக்கின்றன. இந்நாட்டை ஆளவேண்டுமென்று ஆசைப்படுகிற ஒவ்வொரு சிறுபான்மையோர்க்கும் அடிமைகளாகி ஆடுமாடுகள்போல உழன்று வருகின்றனர். பேராண்மை யுடைய பிரநாட்டார்கள் மகரிஷிகளின் சந்ததிகளை மிருகங்களிலும் கடையாகப் பாவித்துத் தீண்டத்தகாதவர்களாகப் புறக்கணிக்கின்றனர். இத்தகைய வறுமைக்கிடையிலும் அவமானங்களுக்கிடையிலும் எவ்விதத்திலாவது உயிர் வாழவேண்டுமென்று இந்நாட்டினர் அலைகிறார்கள். என்னே இவர் நிலைமை!

* * *

"பெருமையும் சிறுமையும் தான் தர வரு" மென்பது ஆன்றோர் வாக்கு. ஒருவன் பிறரிடம் அன்புகாட்டி அவருக்கு மரியாதையும், கண்யமும் தந்தால், தானே கண்யமுடையவனாகிறான். பிறருக்குத் தீங்கிழைத்தால் முடிவில் தனக்கே கேடுவரும். கிணறு வெட்டப் பூதம் வந்தாற்போல யக்ஞமானது பொது நன்மைக்கு உழைத்தல் என்பது போய் எப்போது யாகத்தின் பெயரால் ஒரு சிறுபான்மையோர் பாமரரின் உரிமையைப் பறிகலானார்களோ, அப்போதே நாட்டுக்கு நல்குரவு நேரலாயிற்று. "சண்டாளர்" என்கிற பொல்லாத மந்திரம் ஓயாது அவர்கள் காதில் ஓதப்பட்டதால் அவர்களுடைய உயரிய அறிவெல்லாம் ஒடுங்கிப் போயிற்று. தாங்களும் மனிதர்கள் என்கிற எண்ணமே அவர்களைவிட்டு நீங்கிவிட்டது. நாயினுங் கடையாகப் பாவிக்கப்பட்டார்களேயன்றிப் பச்சாத்தாபம், அன்பு, அனுதாபம் முதலியவைகளைக் கனவிலுங் கண்டிலர். இச் 'சண்டாளர்களின் சிருஷ்டிகர்த்தாக்'களாகிய மேன்மக்கள் கதி என்னவென்றாலோ, அவர்கள் தங்களைக் கட்டியாளும் அதிகாரிகளின் அடி வணங்கிப் போற்றி வருகின்றனர். அவர்களைத் தவிர வேறு தெய்வமும் கண்டிலர்; அவர்களுக்குக் குற்றேவல் செய்வதின் மிக்கதோர் தொழிலும் இவர்க்கில்லை. அந்தோ, இதைவிட இழிந்த நிலை யாது! இதற்கெல்லாம் பொறுப்பாளர் யார்? நாட்டின் மக்களே. முன் செய்த வினைப்பயன் பின்வந்து மூண்டிருக்கிறது. ஆதலால் இதற்குக் கழுவாய் தேடிக்கொள்ளும் பொறுப்பும் அவர்களிடத்தே உளது.

* * *

நல்லபாம்பு தீண்டிவிட்டால் அப்பாம்பைக் கொண்டேதான் விஷத்தை நீக்க முடியுமென்பது ஒரு பழங்கொள்கை. அதுபோலவே ஊழ்வினைப் பயனாகிய இழிநிலையைப் போக்கி உயர்நிலை யடைவதற்கான வினையாற்றும் நாட்டின்பொறுப்பே. இந்நாட்டில் மட்டுக்கு மிஞ்சியுள்ள அறநெறிதான் மக்களின் அழிவுக்குக் காரணமென்று சிலர் அஞ்சாது பிதற்றுகின்றனர். அவர்கள் உண்மை அறிந்திலர். பாபிலோனியா, எகிப்து, கிரீஸ் முதலிய பழைய நாடுகள் ஒருகாலத்தில் பேராக்கம் படைத்திருந்தும் இப்போது இருந்த இடமுங்கூடத் தெரியாது அழிந்துபோ யிருக்கையில், இந்நாடுமட்டும் அநேக இடையூறுகளுக்கிடையே இன்றைக்கும் உயிர் வாழ்ந்திருப்பதற்குக் காரணம் உயரிய அறநெறி நோக்கமொன்றே என்பது அவர்களுக்குத் தெரியாது. நாடு பின்னும் மேம்பாடடைய வேண்டுமானால் அறவாழ்வைப் புறக்கணித்த லொண்ணாது; அதை நன்கு கடைப்பிடித்தலே ஒல்லும். கடவுள் எப்பொருளிலும், எவ்விடத்தும், மாந்தர் உள்ளும் புறமும் உறைந்து கிடக்கிறார் என்றும், அம்மெய்ப்பொருள் ஒன்றே—புல்லாய், பூண்டாய், செடியாய், மரமாய், விலங்காய், பறவையாய், மனிதனாய், தேவனாய்—பலவாய்த் தோன்றி யுள்ளதென்றும் சாத்திரங்கள் கூறியவண்ணமா யிருக்கின்றன. 'மேன் மக்கள்' என்போர் இவ்வுறுதிக் கொள்கையைப் பழக்கத்தில் கொணராதிருந்தது நூலின் குற்றமாகுமோ? கடவுளே பல்வேறு வடிவாய்த் தோன்றியுள்ளார் என்பதை உணர்ந்தவன் ஒரு வகுப்பினரைக் கீழோராகக் கருதி வெறுக்கவுங் கூடுமோ? மக்களிடத்துக் கடவுளைக் காண முயலாது கல்லிற் காண முயலல் அவரை எளனம் செய்தாற்போலாயிற்று. என்றைக்கு உடன் பிறந்தாரைப் பாவிகளென்று பாவித்தார்களோ, என்றைக்கு இறைவனது ஒரு பாகமாகிய பராசக்தியின் வடிவங்களாம் பெண்களைப் பேயென்றும் பேதையென்றும் பாவித்தார்களோ, அன்றைக்கே பழியும் பெறலாயினர். தம் வினைப்பயனைப் பிறர்க்கு அடிமைகளாகி, மானம், உரிமை முதலியன இழந்தனர். இப்பழியினின்று நீவர்த்தியடையும் பொருட்டு மக்களை மறுபடியும் தேவர்களாகப் பாவித்துப் போற்றிப் பணிசெய்வதே நாடு இந்நாளில் ஆற்றவேண்டிய கடனாகும்.

* * *

இப்பொழுது யாண்டும் புத்துயிர்க்கு அறிகுறிகள் காணப்படுகின்றன. நாட்டின் நிலைமையைப்பற்றிய அதிருப்தி மிகைப்பட்டுக் கொண்டே வருகிறது. எத்துறையிலும் எவ்வகுப்பிலும் மேம்பாடடைவதற்கான கிளர்ச்சிகள் எழும்பிய வண்ணமாயிருக்கின்றன. ஆனால், இம்முயற்சிகள் பெரிதும் மரத்தின் இலைகளுக்கும் கிளைகளுக்கும் நீர் பாய்ச்சுதல்போலவே இருக்கின்றன. வேருக்கு நீர் பாய்ச்சினால் மரம் முழுதுமே அதைப் பெறுவதுபோல, ஒரு தேசத்தின் உயிர்நிலையை உரப்படுத்தினால் அங்கங்கள் யாவும் திறம்பெறுவது திண்ணம். பாரத நாட்டின் உயிர்நிலை அரசியலிலும், சமுதாய நலத்திலும், வாணிபத்திலும் இல்லை; பாரமார்த்திக வாழ்வுதான் பாரதத்தாயின் உயிர் நிலை. இதைச் செம்மைப்படுத்துவதாலேயே எனையதுறைகளிலும் நாடு நலனடையும். துறவென்பதும் அறவாழ்வென்பதும் உலகம் பொய்யெனக் கருதிச் சும்மா உட்கார்ந்திருந்து காலங்கழித்தலல்ல. மக்கள் யாவரையும் பகவானுடைய திருவவதாரங்களாகப் பாவித்துத் தன்னலங் கருதாது, தமக்கியன்ற தொழிலை அவர்களுக்கு திருப்பணியாகச் செய்வதே பாரமார்த்திக வாழ்வு. "ஹே, பிரபுவே! நீயே உலகெலாமானாய். எண்ணிறந்த ஜீவகோடிகள் வேடம் பூண்டிருப்பவன் நீயே. நின்னைப் பூசித்துப் பணிசெய்து பிழைக்க என்கடன். அக்கி வேஷம்போட்டுள்ள உனக்கு ஆறுதல் சொல்லி வணங்குகிறேன். தரித்திரர்களாகத் தோன்றியுள்ள உனக்குப் பொருள்திரட்டும் உபாயம் போதித்து வணங்குகிறேன். அறிவிலி வேடம் பூண்டுள்ள உனக்குக் கல்வி புகட்டிப் போற்றுகிறேன். உன்னை நானு விதத்திலும் சேவிப்பதற்கான சந்தர்ப்பத்தைச் செய்து வைத்ததற்காக எந்நாளும் உன் அடி வணங்குகிறேன்." இத்தகைய புனித நோக்கத்துடன் பணிசெய்ய முன் வருவதே பூர்வப்பிதிர்க்கு விமோசனம் தேடுவதாகும். எப்பொருளிலும் எவ்விடத்தும் கடவுளைக் காண்பதற்கு உற்ற உபாயமும் இதுவே.

* * *

பொருளாக்கத்துக்காக வென்று பிறநாட்டுக்குப் பிச்சைக்காரர்கள் போலப் போவது அறவோர்க்கு அடாதது. பரஸ்பர சகாயம் செய்வதே வாழ்வின் மர்மம். அன்னிய நாட்டார் அறவாழ்வு இன்னதென்று தெரியாது தயங்குகின்றனர். அவர்களுக்குப் பாரமார்த்திக வாழ்வை நாம் புகட்டவேண்டும். மற்ற நாடுகளுடன் சமநிலை யடைவதற்கும், மரியாதை பெறுவதற்கும் உபாய மிதுவே.

* * *

இத்தகைய அரும் பெரும் கடனாற்றுவதற்கு நாட்டின் நன்மக்கள் யாவரும் திரள் திரளாக வெளிக் கிளம்புவார்களாக. சுயநலம், சிற்றின்பம் முதலியவைகளை அறவே துறந்துவிட்டு முன்வருவார்களாக. தூய உள்ளத்துடன், அன்புடன், ஊக்கத்துடன் மக்கள் யாவரையும் தெய்வத்தின் திருவவதாரங்களாகப் பாவித்துப் பணிசெய்தால் இகபர மிரண்டிலும் இன்பநிலை தானே வந்தெய்தாதோ? மகேசுவர பூசை அல்லது விராட் பூஜையாகிய இதுவே இந்நாள்வேண்டப்படும் வேள்வியாம்.

"ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்"

---

யாழுகக் கற்றவற்றை, யாழொடு கலந்து ஆங்காங்கு பாடி மக்களுக்கு இனிமை பயந்தவர்கள் இப் பாணர்களே. இன்றும் பல விழுமிய நூற்களுக்கு அரியவுரைகளும், நுட்பங்களும் ஒவ்வோரிடத்தி லிருக்கும் பரம்பரை மாணவர்கட்குத் தோற்றமேயொழிய, அவைகள் எழுதப்படவில்லை; அப்புலவர்கள் அவற்றை எழுதச் சம்மதிக்கின்றாருமில்லை.

---

# நகர நிர்வாகமும் நகர நிர்மாணமும்

சென்ற அக்டோபரில் நகரநிர்வாக யாதாஸ்தை, நகர சபையார் பரிசிலனை செய்தனர். அனேக குறைகள் எடுத்துரைக்கப்பட்டன. சில நூதன ஆலோசனைகளும் சொல்லப்பட்டன. ஒரு நகரத்தின் அழகு, வளப்பம், பெருமை அனேக விஷயங்களைப் பற்றி நிற்கின்றன. நகரவாசிகளின் அறிவு, ஒழுக்கம், நடை உடை பாவனைகள், பழக்க வழக்கங்கள், தொழில் முறைகள், அரசாங்க ஒத்தழைப்பு, மற்றும் பல துறைப்பட்ட சங்கங்களின் ஆதரவு, இவைகள் நகர நிர்மாணத்தின் அழகையும் பெருமையையும் வளர்க்கும் தன்மை வாய்ந்தவை. ஆகவே நகர வாசிகளின் ஒழுங்கிலேயே நகரச் சிறப்பு தங்கி யிருக்கிறது.

முதலாவது நகர நிர்வாகிகள் கவனிக்க வேண்டிய விஷயம்:— எவ்வித ஜனங்கள் வசிப்பளவின்றி நகரச் சிறப்பை உயர்த்தலாமென்பதே. நகரத்திற்குள் போக்குவரவு சாதனத்தை நகரசபையார் கைக்கொள்ளல் தகுதி. மின்சார சக்தியைக் கொண்டு விளக்குப் போடுதல், டெலிபோன் அமைத்தல், டிராம்வண்டி ஓட்டுதல், வேறு அனேக காரியங்களுக்கு உபயோகமாகுமாகையால், நகரத்திற்குச் சொந்தமாகஇவைகளெல்லாம் இருக்கவேண்டும். இவைகளை அறிவோடு நிர்வகிக்க, இதில் வரும் லாபம் நகரத்தை மேன்மைப் படுத்தும் வழிகளில் உபயோகமாகும்.

இரண்டாவது கூட்டுறவுப் பண்டசாலைகளுக்கு விசேஷ ஆதரவு அளிக்க அப்பண்டசாலைகள் நகரெங்கும் நேர்த்தியான கட்டிடங்களில் ஆங்காங்கே ஜனங்களுக்கு வேண்டிய உயர்தர உணவுப் பொருள்கள், ஆடைகள், மற்றுமுள்ள வஸ்துக்கள் இவைகளை விற்றும், அனேக பொருள்களை உற்பத்தி செய்தும், ஜனங்களுக்குப் பயனளிக்கும் காபி ஹோட்டல்கள், வெற்றிலை பாக்கு, சிகரெட், பீடிகள் இக்கூட்டுறவு பண்டசாலைகள் விற்க முன்வரும். அப்போது கார்ப்பொரேஷன் அனேக குறைகளைக் கூட்டுறவுச்சாலை அதிகாரிகளிடம் கலந்து நிவர்த்தி செய்து கொள்ளலாம். மேலும், கார்ப்பொரேஷனின் பொதுச் செலவில் அதிக குறைவு ஏற்படலாம். ஏதாவது சுரம் நகரத்தைப் பீடிக்குமாயின் பண்டசாலைகளின் மூலமாய் நகரவாசிகளுக்கு வேண்டிய புத்திமதி புகட்டலாம். சில சாமான்களை விற்பனை செய்யாமல் தடைப் படுத்திக் கொள்ளலாம். இவைபோன்ற அனேக சௌகரியங்கள் உண்டு.

மூன்றாவது, வீடுகள் சுகாதார நிலையில் கட்டப்படவேண்டுமாயினும் சரி, பழைய வீடுகளை அவ்வித நிலைமைக்கு மாற்றுமாறு வீட்டுக்காரர்களை நிர்ப்பந்தப் படுத்த வேண்டுமானாலும்சரி அவ்வீடுகளிலிருந்து வரும் வருமானம் பாங்கிகளில் கிடைக்கும் வட்டிக்குக் குறைவில்லாமலிருக்க வேண்டும். இப்போதுள்ள மேல் 1 பங்கு வீட்டு வரி வெகு கடுமை. ஆகையாலேயே வீட்டுச் சொந்தக்காரர்கள் வீடுகளைக் கவனிப்பதில்லை. 10 வருடங்களுக்கு முன் வீட்டுச் சொந்தக்காரர்களின் நிலைமைக்கும், இப்போதுள்ளவர்களின் நிலைமைக்கும் சம்பந்தமே இல்லை. அப்போது முனிசிபாலிடியின் உதவியாலும் வேறு காரணங்களினாலும் வீடுகளின் விலை, பூமியின் விலை பதின் மடங்காய் ஏறிற்று. தற்கால நிலை மாறி விட்டது. ரூ. 15000 மதிப்புள்ள வீடு ரூ. 9000க்குக் குறைந்தே விலையாகிறது. வாடகை ஒரு வகையிலும் குறையாவிட்டாலும், வீட்டைநம்பி ஜீவனஞ் செய்வோரின் கதி கேவலமாய்க் கொண்டு வருகிறது. ஆகையால் பழைய வீடுகள் நிலை குலைந்தே நிற்கின்றன. புது வீடுகளைக் கட்டவதும் நஷ்டமாயிருக்கிறது. ஆகவே சுகாதாரம் விருத்தி யடைவதில்லை. இக்காரணம் பற்றிப் புது வரிகளை வீட்டின் பேரில் சுமத்துதல் கூடாது. ரூ. 10 வாடகைக்குக் குறைந்த வீடுகளின் மேலுள்ள வரிகளை எடுத்துவிடல்வேண்டும்.

நான்காவது, பாடசாலைகள், ஆஸ்பத்திரிகள் இவை போன்றவைகள் நகரசபைக்குச் சொந்தமான கட்டிடங்களிலேயே அமைக்க வேண்டும். வாடகைக் கட்டிடங்களில் நடத்துவதில் அனேக சிரமங்கள் உள.

கே. எல். முத்துஸ்வாமி ஐயர்.



# மணித்திரள்

மீன்களில் 19,000 வெவ்வேறுவகை இதுகாறும் கண்டுபிடிக்கப்பட் டிருக்கின்றன.

* * *

பூமியிலுள்ள எல்லா சமுத்திரங்களிலும் சேர்ந்து மொத்தம் 30 கோடி கன மைல் அளவுள்ள ஜலம் இருக்கிறதாம்.

* * *

லாஸ் ஏஞ்சலஸ் என்னும் நகரத்தின் வியாபாரச் சங்கத்தாரின் கண்காட்சிச் சாலையில் 100 வயதான ஓர் ஆமை இருக்கிறதாம்.

* * *

உலோகப் பொருள்களில் ஆண், பெண் வேற்றுமை யுண்டென்பதாக டாக்டர் மனுலாய் என்னும் ருஷிய விஞ்ஞானக் கலைஞர் கண்டு பிடித்திருக்கிறாராம்.

* * *

லண்டன் நகரில் இலவசப்புத்தக சாலைகள் எண்பது இருக்கின்றனவாம். ஓர் ஆண்டில் சராசரி இரண்டுகோடி புத்தகங்கள் இப்புத்தக சாலைகளிலிருந்து ஜனங்களால் இரவல் வாங்கப்படுகின்றன. இவற்றுள் 45லட்சம் புத்தகங்கள் குழந்தைகளால் இரவல் வாங்கப்படுவனவாம்!

* * *

அமெரிக்காவிலுள்ள கிரீன் ரிவர் என்னும் ஆற்றுக் கருகில் ஒரு சிறு குட்டை இருக்கிறது. இதன் குறுக்களவு ஆறு அடிதான். இதில் குளிர்ந்த உப்பு ஜலம் தேங்கியிருக்கிறது. இந்த ஜலத்திலிருந்து சில சமயங்களில் தீ கிளம்பிக் கொழுந்து விட்டு எரிகிறதாம். ஒவ்வொரு சமயம் இக்குட்டையிலுள்ள தண்ணீர் அமைதியாயிருக்குமாம்; சில சமயங்களில் கொதித்துப் பொங்குமாம். இவ்வாறு பொங்கும்போது ஒரு நெருப்புக் குச்சியைக் கொளுத்தி விட்டெறிந்தால் பகீரென்று பற்றி உயரமாக எரியுமாம். சில சமயங்களில் இக்குட்டையிலிருந்து கிளம்பும் பாறைக் கற்களும், தீப்பிழம்பும் நூறு அடி உயரம்வரை செல்கின்றனவாம்.

* * *

அமெரிக்காவில் கவனமின்றி மோட்டார் ஓட்டிப் பிறருக்குத் தீங்கு விளைப்பவர் களுக்கு அந்நாட்டு நீதிபதிகள் விநோத மான தண்டனை விதித்து வருகிறார்களாம். ஓஹியோவில் இவ்வாறு அலட்சியமாக மோட்டார் சவாரிசெய்து மற்றும் இரண்டு வண்டிகளை உடைத்த ஒரு பெருஞ்செல்வனை, டாலிடோ கலாசாலையில் உடற்கூறு நூல் வகுப்பில் மாணக்கர்கள் உதாரணமாய்ப் பார்த்துப் படிப்பதற்கு நீதிபதி அனுப்பி வைத்தார். உயிர்ச் சேதம் நேர்ந்த சில வழக்குகளில், தங்களால் கொல்லப்பட்டவர்களின் பிணங்களுடன் தனிமையாகச் சில தினங்கள் அம்மோட்டார் ஓட்டிகள் இருக்க வேண்டுமென்று நீதிபதிகள் தீர்ப்பளித்தனராம்!

* * *

ஜெர்மனியில் லீப்ஸிக் நகரத்தில் ஒரு பிரமாண்டமான காற்றாடி இயந்திரம்ஒன்றினை கட்டி வருகிறார்கள். இதன் உயரம் 2000 அடி. உச்சியிலுள்ள காற்றாடியின் குறுக்களவு 500 அடி. அதாவது ஒவ்வோர் இறகும் 300 அடி நீளமுள்ளதாயிருக்கும். லீப்ஸிக்கிலுள்ள காற்று நிலைக்கு, இப்பெரிய காற்றாடி நிமிஷத்துக்கு 250 முறை சுற்றுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்த இயந்திரத்திலிருந்து மின்சாரசக்தி உண்டாக்கப் போகிறார்கள். இதைக் கட்டிமுடிக்க 60,000 பவுன் செல்லுமாம். கட்டியபின்னர் இயந்திரத்தை ஓட்டுவதற்குச் செலவு எதுவுமில்லை. இக்காற்றாடி மண்டபத்தில் ஒரு புதுமை யென்னவெனில், நடுவில் அதாவது ஆயிரம் அடி உயரத்தில் ஒரு சிற்றுண்டிச் சாலை வைக்கப்படுமாம்.

* * *

மலாய்நாட்டில் தற்போது செழித்தோங்கும் ரப்பர்த் தோட்டங்கள் எல்லாம் திருட்டு விதைகளி லிருந்து உண்டானவையாம். முதன் முதலில் தென் அமெரிக்காவிலுள்ள பிரேஸில் நாட்டில்தான் ரப்பர் பயிராகி வந்தது. ரப்பர் விதைகள் ஏற்றுமதி செய்யக் கூடாதென்ற கடுமையான சட்டம் அந்நாட்டில் இருந்தது. ஹென்ரி விக்காம் என்பவர் நாற்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்பு திருட்டுத் தனமாக மூனறு மூட்டை விதைகளை லண்டனுக்குக்கொண்டு வந்து கியூ என்னும் தோட்டத்தில் விதைத்தார். 2500 செடிகள் முளைத்தன. இவற்றை மலாய்நாட்டுக்கு அனுப்பியதில் ஏழு செடிகள் பட்டுப்போகாமல் வந்து சேர்ந்தன. இந்த ஏழு செடிகளிலிருந்து இப்போது மலாய் நாட்டில் 30 லட்சம் ஏக்கர் ரப்பர் தோட்டங்கள் செழித்தோங்கி யிருக்கின்றன.

# ஊர்வம்பு

"தமிழ்த்தேனீ" திரட்டியது

நாடெங்கும் ராயல் கமிஷனைப்பற்றிய புலம்பல் அகோரமாகக் கிளம்பிவிட்டது. அரசியல் உலகில் எங்கே பார்த்தாலும் அழுகைச் சத்தம், கூக்குரல், தலைவிரிக்கோலம்.

* * *

முக்கியமாக, கமிஷனில் ஸ்தானம் கிடைக்காதாவென்று கனவு கண்டுகொண்டிருந்தவர்களும், ஜோதிடம் பார்த்துக்கொண்டிருந்தவர்களும், தந்திர மந்திரம் செய்துகொண்டிருந்தவர்களும், கமிஷனில் எல்லாரும் வெள்ளைக்காரர்கள் என்றறிந்ததும் ஏங்கியே போய்விட்டார்கள்.

* * *

கோயிலிலுள்ள தெய்வங்கள், வானத்திலுள்ள தெய்வங்கள், அதிகாரவர்க்கத் தெய்வங்கள் ஆகிய எல்லாத் தெய்வங்களுக்கும் அவர்கள் கொடுக்கும் சாபங்கள் எல்லாம் பலித்தால்—என்? அப்புறம் மருந்துக்குக் கூட உலகில் ஒரு தெய்வம் அகப்படாது.

* * *

நாம் இளம்பிராயத்தில் கண்ட ஒரு காட்சி நினைவுக்கு வருகிறது. சிறுவர் சிலர் மாந்தோப்புக்குச் சென்றார்கள். அவ்விடச் சிறுவன் ஒருவன் மாமரத்திலேறி, கீழே வாயைத் திறந்துகொண்டு எவனேனும் நின்றால் அவன் வாயில் மாம்பழம் பறித்துப் போடுவதாகச் சொன்னான்.

* * *

ஒரு பேதைச் சிறுவன் அவ்வாறே வாயைத் திறந்துகொண்டு நின்றான். துஷ்டச் சிறுவன், மாம்பழத்துக்குப் பதிலாக முசுகுகள் என்னும் மஞ்சள் எறும்புகளின் கூடு ஒன்றைத் திறந்திருந்த வாயில் போட்டான்.

* * *

அப்போது அந்தப் பேதைச் சிறுவனின் முகத்தைப்பார்த்தபோது நமக்கு எவ்வளவு பரிதாபம் உண்டாயிற்றோ அவ்வளவு பரிதாபம் இப்போது அரசியல் தலைவர்களின் நிலையை நோக்குகையில் உண்டாகிறது.

* * *

பனகால் ராஜாவும், ஸ்ரீமான் ஓ. கந்தசாமி செட்டியாரும் கடைசியாக ராஜியாகப் போய்விட்டார்களாம். பிரிந்தவர் கூடினால் பேசவும்வேண்டுமோ? ஓம் சாந்தி சாந்தி சாந்தி:

* * *

ஆனால் ஒரு விஷயம். போன வருஷம் ஸ்ரீமான் செட்டியார் மான கஷ்டமாகப் பெற்ற ஒரு தம்பிடி என்ன ஆவதென்று தெரியவில்லை. எப்போது ராஜி ஆகி விட்டதோ அப்போது அந்தத் தம்பிடியைத் திருப்பிக் கொடுத்து விடுவதுதான் நியாயமாயிருக்குமென்று தோன்றுகிறது.

* * *

மற்றும், பொது ஜனங்களிடையே சண்டை பகிரங்கமான அளவுக்குச் சமாதானம் பகிரங்கப்படவில்லை யாதலின், ஸ்ரீமான் செட்டியார் அந்த தம்பிடியை மேளதாளத்துடன் ஊர்வலமாக எடுத்துச்சென்று பனகால் ராஜா வீட்டில் சேர்ப்பித்து விடுதல் உசிதமாயிருக்கும்.

* * *

ராஜாவும் செட்டியாரும் சமாதானமாய்ப் போனதில் நமக்குப் பூரண சந்தோஷமே. இரு தரப்பு வக்கீல்களையும், பத்திரிகை விற்கும் பையன்களையும் தவிர மற்ற எல்லாரும் சந்தோஷமே யடைவார்கள். ஆனால் ராஜி உடன்படிக்கையில் பொது ஜனங்கள்மீது சுமத்தப்படும் ஒரு பழியை மறுக்க நாம் கடமைப்பட்டிருக்கிறோம்.

* * *

உறவினர் சண்டையிட்டாலும் முடிவில் ஒற்றுமையாய்ப் போய்விடுவோர்கள்; வேடிக்கை பார்ப்பவர்களுக்குத் தான் ஆபத்து என்று சொல்லப்படுவதுண்டு. ராஜாவும் செட்டியாரும் பொதுஜனங்கள்மீது போடும் பழி அதற்கு உதாரணமாயிருக்கிறது.

* * *

தங்கள் பேச்சுகளைப் பொதுஜனங்கள் தப்பர்த்தம் செய்துகொண்டது குறித்து இருதரப்பினரும் வருந்துவதாக ராஜி உடன்படிக்கையில் ஒரு பகுதி கூறுகிறது. பொது ஜனங்களை அப்படிச் சந்தேகிப்பதற்கு ஆதார மெதுவுமில்லையென்று அவ்விருதரப்பினருக்கும் நாம் தெரிவித்துக் கொள்கிறோம்.

* * *

அவர்களுடைய பேச்சுகளை மட்டுமல்ல—அவர்களுடைய வாக்கு மூலங்கள், குறுக்கு விசாரணைகள், விசாரணைகளில் பதில்கள் ஆகியவற்றில் எதையும் பொதுஜனங்கள் தப்பர்த்தம் செய்துகொண்டதே கிடையாது என்று உறுதி கூறுகிறோம்.

* * *

சென்னைச் சட்டசபையில், பொட்டுக் கட்டுதலை ஒழிக்கவேண்டுமென்று டாக்டர் முத்துலக்ஷ்மி அம்மாள் கொண்டுவந்த தீர்மானத்தின்மீது வாதம் நடக்கையில், வாயாடி என்று பெயர்பெற்ற சில அங்கத்தினர் வாய்திறக்கவில்லை.

* * *

எந்த விஷயம் வந்தாலும்சரி, தங்கள் திருக்கருத்தைத் தெரியாமல் விருப்பமில்லை என்று கங்கணங் கட்டிக்கொண்டிருக்கும் மேற்படி அங்கத்தவர் இவ்விஷயத்தில் 'சும்மாயிருப்பதே சுகம்' என்னும் உண்மையைக் கண்டார்கள் போலும்.

* * *

சட்டசபையில் தேவஸ்தான பரிபாலனச் சட்டத்துக்குச் சிறு திருத்த மசோதா ஒன்றை மந்திரி அரங்கநாத முதலியார் கொண்டு வந்தார். மந்திரி இது சம்பந்தமாக நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டாரென்றும், தேவஸ்தானங்களில் 'கை' வைத்ததாலேயே பனகால் ராஜா இந்த கதியை அடைந்தாரென்றும், ஸ்ரீ அரங்கநாத முதலியாருக்கும் அதே கதி நேருமென்றும் ஓர் அங்கத்தினர் பயமுறுத்தினாராம்.

* * *

ஒரு கதை சொல்கிறோம், கேளுங்கள். ஒரு மனிதன் ஒரு கோயிலை அப்பிரதட்சிணமாகச் சுற்றிச் சென்றான். அங்கிருந்த ஒரு மகான் 'அப்பனே! கோயிலை அப்பிரதட்சிணமாகச் சுற்றலாமா? பிரதட்சிணமாகப் போ" என்று புத்திமதி கூறினர். அம்மனிதன் அப்புத்திமதியை ஏற்றுப் பிரதட்சிணமாகப் போகையில் ஒரு கல் இடறி விழுந்தான்.

* * *

மண்டைக் காயத்துடன் அம்மனிதன் மகானிடம் சென்று 'உமது புத்தியைக் கேட்டதற்கு இதோ கைமேல் பலன் பாரும்' என்றான். பெரியவர் 'அறிவிலி! அப்பிரதட்சிணமாகச் சென்றிருந்தாயானால் அங்கிருந்த கொடிய நாகத்தினால் தீண்டப்பட்டு மாண்டே போயிருப்பாய். இப்போது மண்டைக் காயத்துடன் பிழைத்தாய்' என்றார்.

* * *

பனகால் ராஜா தேவஸ்தானங்களைத் தாய்மைப்படுத்தச் செய்த சிறு முயற்சியே அவரை இந்த நிலையிலாவது வைத்திருக்கிறது. இல்லாவிடில் மற்ற மாகாணங்களில் மாஜி மந்திரிகள் அடைந்த நிலையை அவரும் எய்திருப்பார்.

* * *

ஸ்ரீமான் யூ. பி. கிருஷ்ணமாச்சாரியார் என்னும் தென்னாட்டுப் பெரிய மனிதர் வடநாட்டில் திக்விஜயம் செய்யப் போயிருந்தாராம். அவர் திரும்பி வந்து பார்க்கும் போது தென்னாட்டுக் கோட்டை மகாத்மா காந்தியினால் பிடிக்கப்பட்டுப் போயிற்று என்று கண்டு திடுக்கிட்டுப் போனாராம்.

* * *

குழந்தை விதவைகளை மணம் புரியும்படி கலாசாலை இளைஞர்களுக்கு மகாத்மா உபதேசித்ததனால் தென்னாடெங்கும் ஒரே குழப்பமா யிருக்கிறதாம். "நான் இல்லாத வேளையில் இந்தப் பொல்லாத வேலையை மகாத்மாகாந்தி எப்படிச் செய்யலாம்?" என்று அப்பெரிய மனிதர் பொருமுகிறார்.

* * *

அவர் அத்துடன் நிற்கவில்லை. மகாத்மா காந்திக்கு விடுத்திருக்கும் ஒரு பகிரங்கக் கடிதத்தில், (1) குழந்தை விதவைகளின் மணம், (2) கோயில்களிலும் விபசார விடுதிகளிலும் கடவுள் சமமாக இருத்தல்—இவ்விரண்டு விஷயமாகவும் தம்முடன் வாதிட வரும்படி மகாத்மாவை அறை கூவி அழைக்கிறார்.

* * *

ஐயா! ஆச்சாரியாரே! இந்தத் தந்திரம் பலியாது! மகாத்மாவுடன் நேராக வாதிடும் பெருமைக்கு நீர் ஆசைப்படுவது இயல்புதான். ஆனால் இதே தந்திரத்தை மன்னர் குடியில் ஒரு பண்டிதர் கையாண்டு அதை மகாத்மா கண்டு பிடித்து விட்டபடியால் உமது ஜபம் சாயாது.

* * *

ஒன்று செய்தீரானால் மகாத்மா உம்மைக் கண்டு பேசுவதற்கு நாம் சிபார்சு செய்வோம். கதர் நிதிக்கு ஓர் ஆயிரம் ரூபா சேர்த்துக் கொள்ளும். நீர் டில்லியிலிருந்தாலும் உம்மை மகாத்மா தேடிக் கொண்டு வரும்படி நாம் ஏற்பாடு செய்கிறோம்.

* * *

"திருப்பூர் கம்போடியா காட்டன், பிளாண்டிங் அண்டு கதர் மேன்பாக்டரிங் கம்பெனி லிமிடெட்" என்ற பெயர் கொண்ட கம்பெனியார், அகில பாரத சர்க்கா சங்கத்தினால் கதர் உற்பத்திக்காரர்களுக்கு அளிக்கப்படும் அத்தாக்ஷிப் பத்திரம் பெற்றவர்களல்லரென்று சர்க்கா சங்கத்தின் காரியதரிசி தெரிவிக்கிறார்.

# எதிரொலி

## தமிழ்ப் புதினத்தாள்கள்

"செந்தமிழ்ச் செல்வி" வெளியிட்டிருக்கும் ஓர் அறிக்கை பின்வருமாறு கூறுகிறது:—

இப்போது சில ஆண்டுகளாகத் தமிழ்மொழி பேசுவோர் இருக்கும் ஊர்களிலே, தமிழ்க் கல்வி யறிவுடையவர்களில் சிலர் அடுத்தடுத்துப் புதினத்தாள்களைத் தோற்றிக் கொண்டிருக்கின்றார்கள். தமிழ்ப் புதினங்களைப் போற்றுவார் மிகுதியாயிருப்பாரானால் அவை தோன்றுவதால் நன்மையே. ஆனால் தமிழ்மக்களில் எழுதப் படிக்கத் தெரியாதார் தொகையே மிகுதியாயிருக்கின்றது. தமிழ் கற்பதிவ் அவர்கட்கு விருப்பமும் கிடையாது. பொருள் தேடி உண்டுடுத்து அறங்குவதிலேயே முனைந்து நிற்கிறார்கள். தமிழ் மொழியினிடத்திலே விருப்பம் வைத்திருப்பவர் சிலரே யாவர். அவர்களில் பெரும்பாலார் ஏழைகளாயிருக்கிறார்கள்.

இத்தகைய மக்களிடையிலே புதிதுபுதிதாகப் புதினத்தாள்களைத் தோற்றி அவை நீள நடவாமல் அவற்றையுங் கைநெகிழவிட்டுத் தாம் அரிதிற் றேடிய சிறு பொருளையுமிழந்து மனம் உடைந்து நிற்பது வருந்தத் தக்கதாகிறது. ஒவ்வோர் ஊரிலும் புதிது புதிதாகத் தாளைத் தவங்கி அம்மருங்கிலுள்ளாரை வற்புறுத்தித் தமது தாளை வாங்கச் செய்வதனால் அங்ஙனம் அதனை வாங்குவோர் தாம் முன்னர் பழமையாக வாங்கிவந்த சிறந்த தாள்களையும் வாங்க இயலாமல் அவற்றையும் நடைபெற வொட்டாமற் றடைசெய்கின்றனர். ஆகவே புதிய தாள்களை ஆங்காங்குத் தோற்றி அவற்றை நீள நடத்தமாட்டாமல் நிறுத்திவிட்டுக் கைப்பொருளையுமிழந்து, நீண்டகாலமாக ஒழுங்காக நடைபெற்று வருகின்ற சிறந்த தாள்களின் ஆக்கத்தையுங் கெடுத்து வருந்துவதினும் அவர்கள் பழமையாய்த் தமிழ் மக்களின் முன்னேற்றங் கருதி ஓவாது உழைத்துவரும்...... சிறந்த தாள்களைப் பரவச்செய்தால் பெரும்புகழும் புண்ணியமுமாகும்.

## கோழி முட்டைகளினால் அபாயம்

"குட்ஹெல்த்" பத்திரிகையினின்றும் அடியிற்கண்ட விஷயம் மொழி பெயர்க்கப்பட்டு "ஆரோக்கிய தீபிகை"யில் வெளியிடப்பட்டிருக்கிறது:—

பாரிஸிலுள்ள நாய் கடி வைத்தியசாலைக்கு நான் சென்றிருந்தபோது டாக்டர் டிஸ்வியர் என்பவர் கோழிமுட்டைகளைப் பரிசீலனை செய்து வருவதைக் கவனித்தேன். அவர் புதிதாக ஒரு விஷயத்தைக் கண்டுபிடித்திருப்பதையும் அறிந்துகொண்டேன். அதனுடைய முழு விவரங்களையும் அவர் சீக்கிரத்தில் வெளியிடுவார். பி. பாராகோலியென்னும் கொடிய கிருமிகள் கோழிமுட்டைகளில் இருப்பதாக அவர் கண்டு பிடித்திருக்கிறார். கோழிமுட்டைகளில் இந்தக் கிருமிகள் வளர்ந்து வருகையில் ஒரு கருநிறத்தை அவைகளுக்கு உண்டுபண்ணி விடுகின்றன. அழுகிப்பான கோழிமுட்டைகள் கருநிறமாக இருப்பதற்கும் அதுவே காரணம். புதிதாக இடப்படும் முட்டைகளில் இந்தக்கிருமிகள் இருக்கின்றன. அதிசாரத்தினால் பீடிக்கப்பட்டிருக்கும் கோழிகள் இடும் முட்டைகளில் இந்தக் கிருமிகள் இருக்கின்றன. இந்தக் கிருமிகள் அபாயகரமானவையென்று டாக்டர் டிஸ்வியர் நிரூபணம் செய்திருக்கிறார். இந்தக் கிருமிகள் அடங்கிய கோழி முட்டைகளைச் சாப்பிட்டவர்களுக்கு கோலேட்டிஸ் முதலியகொடிய வியாதிகளேற்படுகின்றன. கோலேட்டிஸ் என்னும் கொடிய வியாதிபரவுவதற்கு பி.பாராகோலி யென்னும் கிருமிகளே ஜவாப்தாரியாக இருக்கின்றன. சாக்கடைகளிலும், குப்பைகளிலும் அகப்பட்டவைகளைப் பொறுக்கித் தின்று வளரும் பெட்டைக்கோழிகள் இடும் முட்டைகள் அபாயகரமானவை. கோழி முட்டைகளால் அபாயமேற்படுவதை டாக்டர் டிஸ்வியர் தெரிந்துகொண்டு விட்டதால், தம்முடைய ஆகாரப்பதார்த்தங்களிலிருந்து அதை விலக்கு செய்து விட்டார். கொட்டைகளையும், பாலையும் கிலிப்தமாக உபயோகித்து வருகிறவர்கள் கோழி முட்டைகளைத் திரஸ்காரம் செய்து விடலாம்.

திருநெல்வேலி கலால் லைஸென்ஸ் போர்டில் ஸ்ரீமான் பி. திரிகூட சுந்தரம்பிள்ளையை அரசாங்கத்தார் ஓர் அங்கத்தினராக நியமித்தார்களாம். ஸ்ரீமான் பிள்ளை, பொது ஸ்தாபனங்களுக்கு அரசாங்கத்தார் நியமனம் செய்தல் கூடாதென்ற தம் கொள்கை காரணமாக அப்பதவியை மறுத்துவிட்டாராம்.




நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே.—(அப்பர்.)

சென்னை 1927ஹு நவம்பர்மீ 9உ

## தாயின் தலையெழுத்து

பாரதமாதாவின் தலையெழுத்தை உன்னுங்கால் கண்ணீர் பெருகுகிறது. முப்பது கோடி மக்களை ஈன்ற பாரதமாதாவின் தலையெழுத்து அவளது இயல்புக்கு முற்றும் மாறுபட்ட ஒரு நாட்டவரால் எழுதப்பட்டு வருகிறது. இதற்குக் காரணர் யாவர்? அந்நாட்டவரா? பாரத நாட்டவரா? நேயர்களே! சிந்தியுங்கள்! பாரதமக்கட்குள் ஒற்றுமை நிலவுமேல் அந்நியர் பாரதத் தாயின் தலையெழுத்தில் தலையிடமாட்டார்.

நாடு அடிமைக் குழியில் வீழ்ந்ததற்குக் காரணம் நமக்குள் ஒற்றுமையில்லாமலிருந்ததே யாகும். அவ்வொற்றுமையின்மை இன்னுந் தொடர்ந்து வருகிறது. ஒற்றுமையின்மையால் நமது நாடு போயிற்று; நமது செல்வம் போயிற்று; நமது கல்வி போயிற்று; நமது ஒழுக்கம் போயிற்று; நமதுமானம் போயிற்று; நமது ஆண்டகைமை போயிற்று; எல்லாம் போயின. இன்னுமா ஒற்றுமை யின்மை? இன்னுமா அறியாமை? பாரத மக்களே விழித்துப் பாருங்கள்!

போனவெல்லாம் போக. இனிக் கழிந்த நிகழ்ச்சிகளைக் குறித்துக் கவலையுற வேண்டுவதில்லை. எல்லாவற்றையும் மறந்து ஒற்றுமையுற முயலல்வேண்டும். அவ்வொற்றுமைக்கு ஒரு வாய்ப்பு ஆண்டவனல் அளிக்கப்பட்டிருக்கிறது. அஃதென்னை! வரப்போகும் ராயல் கமிஷன் அவ்வொற்றுமைக்குக் கால்கொள்வதாகும்.

மாண்டேகு - செம்ஸ்பர்ட் சீர்திருத்தப்படி அமைந்துள்ள ஆட்சி முறையின்நிகழ்ச்சிகளை ஆராய்ச்சி செய்துமேலுஞ் சீர்திருத்தம் வழங்கலாமா வழங்கக்கூடாதா என்று முடிவுகாண ராயல் கமிஷன் உருக்கொண்டுவிட்டது. அக்கமிஷன் அங்கத்தவர் பின் வருவோர்:— வைகவுண்ட் பர்ன்ஹாம், லார்டு ஸ்டிராத்கோனா, கனம் இ. கடோகன், கனம் ஸ்டீபன்வால்ஷ், கர்னல் ஜார்ஜ லேன் பாக்ஸ், மேஜர் ஸி. ஆர். அட்லி. இவர்களைக் கொண்ட ராயல் கமிஷன் வரப்போகும் புது ஆண்டுத் தொடக்கத்தில் போதருமென்றும், பின்னை விரிந்த கடனுற்ற அக்டோபரில் மீண்டும் வருமென்றும் இராஜப் பிரதிநிதி தெரிவிக்கிறார். அக்கமிஷன் வந்தவழியே திரும்பிப் போகுமாறு செய்ய வேண்டுவது பாரதமககளின் கடமை. விறஞ்செறிந்த ஜக்லுல் பாஷாவின் தலைமையின்கீழ் மில்னர் கமிஷனைப் பகிஷ்கரித்த எகிப்தியர் அடிச்சுவட்டைப் பின்பற்றி நடப்பது நலம்.

பாரத நாட்டின் தலையெழுத்தைப் பாரத மக்களே எழுதும் நிலை பெறுதல் வேண்டும். அந்நிலை யெய்தற்கு வழி யாது? வரப்போகும் ராயல் கமிஷனைப் பகிஷ்கரிப்பதே. பகிஷ்கரித்தால் இந்திய மக்கட்குத் தனிமதிப்பு ஏற்படும். அத்தனி மதிப்பு என்ன செய்யாது? அது, தாயின் தலையெழுத்தை நாமே எழுதும் நிலைகூட்டும்.

இராஜப் பிரதிநிதி ராயல் கமிஷனை யொட்டி வெளியிட்டுள்ள அறிக்கையை நோக்கி நோக்கி இந்திய மக்கள் உணர்ச்சி பெறுதல் வேண்டும். இந்தியாவில் தேர்தல்கள் நடைபெறுகின்றன. பிரதிநிதிகள் சட்டசபையில் அங்கம் பெறுகிறார்கள். அப்பிரதிநிதிகளிருக்கும்போது, இந்தியாவில் தெரிந்தெடுக்கப்படாத பிரிட்டிஷ் பிரதிநிதிகளை மட்டுங் கொண்டுள்ள பிரிட்டிஷ் பார்லிமென்ட் இந்தியாவின் தலையெழுத்தையெழுதும் உரிமை ஏற்பது நியாயமா என்று கேட்கிறோம். முன்னர் அவ்வுரிமையைப் பிரிட்டிஷ் பார்லிமென்ட் ஏற்றுக்கொண்டதே தவறு. அத்தவறு தலை மீண்டும் இழைக்க அது முன் வருவது அறிவுடைமையா என்று வினவுகிறோம். பிரிட்டிஷ் பார்லிமென்ட் நெறியல்லா நெறி சென்று கடனுற்றப் புகுகிறது. அதை நெறிப்படுத்த வேண்டிய பொறுப்பை இந்தியா ஏற்றுப் பிரிட்டிஷ் இராஜதந்திரிகட்கு நல்ல பாடங் கற்பித்தல் வேண்டும்.

விடின் கமிஷனை வரவேற்பதென்பது தேசபக்தியாகாது. அக்கமிஷன் முற்றும் இந்தியரால் ஆக்கப்படினும் அதைப் பகிஷ்கரித்தல் வேண்டுமென்பது எமது உள்ளக்கிடக்கை. என்னை? அமைப்பின் மூலத்தை உற்று நோக்கல் வேண்டும். கமிஷனின் பிறப்பிடம் எங்கே? தாயகம் எங்கே? பிரிட்டிஷ் பார்லிமென்ட் அன்றோ? அதுதான் கூடாது என்பது கவனிக்கப்படல்வேண்டும். பிரிட்டன் மக்களையே பிரதிநிதிகளாகக் கொண்ட பார்லிமென்ட் மற்றொரு தேசத்தின் தலையெழுத்தை எழுதும் உரிமை யேற்கலாமா என்பதே நாம் கிளத்துந் தடை.

விசாரணைக் கூட்டம் அமைக்கும் உரிமை இந்தியருக்கிருத்தல்வேண்டும்; இந்திய சட்டசபைக்கிருத்தல் வேண்டும். இந்தியர் விருப்பத்துக்குப் பார்லிமென்ட் இணங்குதல் வேண்டும். இஃதே உரிமைக்கழகு. இந்தியா தேசீயக் கோரிக்கையைக் கிளத்தியிருக்கிறது. அதன் கதி என்னவாயிற்று? இன்னோரன்ன பிறவற்றையோராது "கமிஷனில் இந்தியர் அங்கம் பெறுவது சாலும்" என்று சொல்வது பொருளற்றதாகும். இப்பொருளற்ற கிளர்ச்சிக்கும் பார்லிமென்ட் இணங்குதல் அரிது. ஒரு வேளை இணங்கினும்

# ராயல் கமிஷனைப் பகிஷ்கரியுங்கள்

## ஒத்துழையாமையை உயிர்ப்பிக்க ஒன்றுங்கள்

## இதுவே சமயம்; கடவுள் வழிகாட்டுகிறார்

## காந்தியடிகள்பால் நண்ணுங்கள்

## சபர்மதியில் மகாநாடு கூடுங்கள்

இந்தியாவில் ஒத்துழையா இயக்கம் எழுந்து அடங்கி யிருக்கிறது. சட்டசபையில் ஒத்துழையாமை என்னும் இயக்கமுங் கிளம்பி ஓய்ந்திருக்கிறது. அவ்வொத்துழையா இயக்கம் உருவில் மறைந்திருத்தல் உண்மை. ஆனால் அஃது உணர்வில் மறையவில்லை என்பதைப் பிரிட்டிஷ் பார்லிமென்ட் உணர்ந்து நடப்பதாக.

இந்திய சட்ட சபையில் தேசீயக் கோரிக்கை கிளத்தப்பட்டது. அதை எல்லாக் கட்சியாரும ஏற்றுக்கொண்டனர். அக்கோரிக்கைக்குப் பார்லிமென்ட் என்னமதிப்புக் கொடுத்தது? அக்கோரிக்கையைப் பொருள்படுத்தாது, ராயல் கமிஷனை அனுப்புவது என்ன செருக்கு?

ராயல் கமிஷன் ஆக்கத்தின்மீது சிறிது கருத்துச் செலுத்துவோம். அவ்வமைப்பைப் பற்றி இந்தியாவில் கருத்து வேற்றுமை ஏற்பட்டிருக்கிறது. சிலர் அவ்வமைப்பில் இந்தியர் அங்கம் பெறாமையைப் பற்றி வருந்துகிறார். தக்க இந்தியர் கமிஷனில் அங்கம் பெறுதிருப்பரேல், கமிஷனைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்று சேலம் ஜில்லா மகாநாடு தீர்மானஞ் செய்திருக்கிறது. இரண்டோர் இந்தியர் அங்கம்பெற்று இந்திய மக்கள் உள்ள நிறைவுகொள்ளுதல் கூடாது. இவ்வாறே இந்திய மக்கள் ஏமாறுவது வழக்கம்.

இராஜப் பிரதிநிதி அறிக்கையில் சட்டசபை அங்கத்தவர்கள் எழுத்து மூலமாகத் தங்கள் கருத்துக்களை வெளியிடலாமென்றும் மற்றவர்களுஞ் சான்று கூறலாமென்றுங் குறிப்பிட்டிருக்கிறார். வேறு பல இங்கித உரைகளும் அவ்வறிக்கையை அணிசெய்கின்றன. இவைகள் யாவும் பார்லிமென்ட் வழி இந்தியா நடைபெறல் வேண்டுமென்னும் அடிமை நினைவிற்கு அறிகுறியாகும்.

பிரிட்டன் எவ்வழியில் நிற்பினும் நிற்க. பார்லிமென்ட் எதைப் பார்ப்பினும் பார்க்க. இராஜப் பிரதிநிதி என்ன இயம்பினும் இயம்புக. இந்தியர்களாகிய நாம் நமது கருத்தில் கண்ணுயிருத்தல் வேண்டும்.

சிலர் பிரட்டனில் வரப் போகும் தேர்தலில் தொழிற் கட்சிக்கு வெற்றி நேருமென்றும், அதனல் இந்தியாவிற்கு நலன் விளையுமென்றும் மனப்பால் குடித்து ராயல் கமிஷனை வரவேற்க அறிவு கொளுத்துவர். அவ்வுரைகட்கெல்லாம் செவிசாய்த்தல் கூடாது. பிரிட்டிஷ் தொழிற்கட்சி அதிகாரத்துக்கு வந்தாலும் இந்தியாவிற்கு நன்மைவிளையாது. இன்று இந்தியா சுயராஜ்யம் பெற்றுவிடின், நாளைபிரிட்டனில் பலதிறத் தொழின் முறைகள் வீழ்ந்துபடுதல் திண்ணம், அவ்வீழ்ச்சி நிகழின் பல்லாயிரக் கணக்கான தொழிலாளர்கள் வருந்த நேரும். இந்நிலையையுண்டுபண்ணத் தொழிற்கட்சி யுடன்படுமோ என்று அன்பர்கள் சிந்திப்பார்களாக. இன்னும் இது குறித்துச் சமயம் நேர்ந்துழி எழுதுவோம். எனவே தொழிற்கட்சி தொழிற்கட்சி யென்று ஏமாறுதல் ஆகாது. தொழிற்கட்சி அதிகாரத்தி லிருந்தபோது என்ன செய்துவிட்டது? அவ்வேளையிலன்றோ விசாரணையின்றி வங்காளத் தேசபக்தர்கள் சிறைப்பட்டார்கள்? வரப்போகும் ராயல் கமிஷனிலும் தொழிற்கட்சி அங்கத்தவர் சிலர் இருக்கிறார். இந்தியாவினிடத்தில் உண்மை யநுதாபமிருக்குமானல், இந்தியாவின் பிரதிநிதிகளில்லாத கமிஷனில் அங்கம் பெற ஏன் அவர்கள் மறுத்திருத்தல்கூடாது? பிரட்டனில் தொழிற்கட்சி பிரட்டன் நன்மையை நாடுமன்றி இந்தியாவின் நன்மையை நாடாது. தொழிற்கட்சி மோகம் இந்தியர்க்கு வேண்டுவதில்லை.

இப்பொழுது இந்தியர் என் செயல் வேண்டும்? சாதிமத வேற்றுமைகளால் நேர்ந்த பிணக்குகளை மறந்து ஒன்றுபட்டு ராயல்கமிஷனைப் பகிஷ்கரிக்க வேண்டும். இப்பகிஷ்காரத்தைக் குறைவற நடாத்தும் ஆற்றலுடையவர் மகாத்மாகாந்தி என்று சொல்லவேண்டுவதில்லை. இவ்வுண்மையை ஸ்ரீமான் சக்லத்வாலா நன்கு உணர்ந்து இந்தியருக்கு உபதேசஞ் செய்கிறார். ராயல்கமிஷனைப் பகிஷ்கரிக்க வேண்டு மென்றும் அப்பகிஷ்காரம் காந்தியடிகள் தலைமையில் நிகழப்பெறல் வேண்டுமென்றும், அவர்க்கே அத்தகை ஆற்றலுண்டு என்றும் ஸ்ரீமான் சக்லத்வாலா கூறுகிறார். இக் கூற்றை நாம் பொன்னேபோல் போற்றுகிறோம்.

காந்தியடிகள் தலைமை ஏற்று அவ்வினையாற்ற வருவரோ என்று சிலர் கருதலாம். எல்லாக் கட்சியாரும் ஒன்றுபட்டு அடிகள்பால் சென்று ஓலமிடின், அடிகள் தலைமை யேற்றுக் கடனுற்றுவர் என்பதில் ஐயமில்லை.

சென்னையில் கூடப்போகும் காங்கரஸ் மற்றத் துறைகளில் கவலை பெரிதுஞ் செலுத்தாது, ராயல்கமிஷனை எவ்வாறு பகிஷ்கரிக்கலாம் என்று உன்னிப் பகிஷ்கார முறைகளை ஒழுங்குபடுத்தி அதை நடாத்தக் காந்தியடிகளை அழைத்தல் வேண்டும். இப்பொருளடங்கிய தீர்மானமொன்று நிறுவப்படுமேல் காந்தியடிகள் தேசத்தின் அழைப்புக்கு இணங்குவர் என்பது ஒருதலை.

காந்தியடிகள் தலைமையும் ஒத்துழையாமையுமே நாட்டுக்கு நல்வழி காட்டுவன என்பதை எவரும் மறத்தலாகாது. ஒத்துழையா உணர்வு பல வழியிலும் கனன்று கொண்டிருக்கும் வேளையில் ஒத்துழைப்பும், கமிஷனில் இந்தியரைச் சேர்க்க முயல்வதும் பிறவும் நிலைபெறு என்பது உறுதி.

ராயல் கமிஷனை ஒரு சோதனையாகக் கொள்வோம். பிரிட்டிஷார் ராயல்கமிஷன் வாயிலாக இந்தியர் உளத்தை அறியவே முயல்கிறார். இவ்வேளையில் இந்தியர் உரிமை வேட்கையுடன் நடப்பாராக.

லார்ட் இர்வின் ராயல் கமிஷனைப் பற்றிய அறிக்கையின் முடிவில் இந்தியர் நட்புரிமையோடு ஒத்துழைக்க வேண்டு மென்று கேட்டிருக்கிறார். லார்ட் இர்வின் நிலை குறித்து இரங்குகிறோம். நட்புரிமையோடு எம்முறை பற்றி ஒத்துழைப்பது என்பது எமக்கு விளங்கவில்லை. நேர்மைமுறை பற்றி நடந்து ஒத்துழைப்புக்கு அழைப்பது அறமாகும்.

ஒத்துழையா இயக்கம் அறத்தை அடிப்படையாகக் கொண்டது. அதை நடாத்த முன் வந்தவர் அறவோர். அவ்வியக்கத்தை அடக்க ஏன் அரசாங்கத்தார் முயன்றனர்? தலைவரை ஏன் சிறைப்படுத்தினர்? ஓர் இயக்கத்தை முன்னிட்டுப் பல்லாயிர மக்கள் சிறை



புகுந்ததன் நுட்பத்தை லார்ட் இர்வின் ஏன் உணர்ந்தாரில்லை? அவ்வியக்கத்தில் சேர்ந்தவர்க்குள் சாதிசமயப் பிணக்குகள் நிகழ்ந்தனவா? சாதிசமயப் பிணக்குகளை அடிக்கடி லார்ட் இர்வின் ஏன் குறிப்பிடுகிறார்? அப்பிணக்குகட்குக் காரணமாக நிற்பது எது? மாண்டேகு - செம்ஸ்பர்ட் - சீர்திருத்தமென்பதை லார்ட் இர்வின் உணர்வாராக. சாதிமத வேற்றுமைகளைக் களைய வெழுந்த ஒத்துழையா இயக்கத்தை அடக்க உறுத்தெழுந்த அதிகாரவர்க்க ஆட்சி முறையே நாட்டின் பிளவுக்குக் காரணம் என்பதை லார்ட் இர்வினுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

லார்ட் இர்வின் சென்றவாரம் சிலஇந்தியத் தலைவர்களை அழைத்துப் பேசினார். பார்லிமெண்டினின்றும் அரும்பி வரும் ராயல் கமிஷனை ஆதரிக்குமாறு கேட்டுக்கொள்ளவே அவர் தலைவர்களை அழைத்தார். இது நியாயமா என்று கேட்கிறோம். ராயல் கமிஷன் பிறப்பதற்கு முன்னர்த் தலைவர்களை அழைத்து அதன் அமைப்பைப்பற்றிப் பேசியிருத்தல் வேண்டும். "நாங்கள் பிடித்த முயலுக்கு மூன்றே கால்" என்று தங்கள் வழியில் நின்று கொண்டே தலைவர்கள் ஒத்துழைப்பை நாடுவது அறிவுடைமையாகாது. "ஒத்துழையாவிடின் கமிஷன் தன் கடனைச் செய்யாது போகும்" என்று லார்ட் இர்வின் மிகத் தந்திரமாக அச்சுறுத்துகிறார். "கமிஷன் வேண்டுவதில்லை. அதனுல் என்ன விளையினும் விளைக" என்றே தேசம் உறுதியாயிருத்தல் வேண்டும்.

இனித்தேசத்துக்கு உள்ள வழி ஒத்துழையாமையே. அவ்வழி நின்றே ஆக்கவேலைவாயிலாக நாட்டிலுள்ள குறைகளையும், அழிவு வேலை வாயிலாகத் தற்கால ஆட்சி முறையிலுள்ள குறைகளையுங் களைய வேண்டுவது தேசத்தார் கடன்.

# இடியேறு

## கெனியாவும் கயானவும்

கெனியா, கயான இரண்டும் பிரிட்டிஷ அரசாங்கத்திற் குட்பட்ட குடியேற்ற நாடுகள். கெனியா கிழக்கு ஆப்பிரிக்காவில் உளது; கயான தென்னமெரிக்காவில் இருக்கிறது. அரசியலில் அவை ஏறக்குறைய ஒரே நிலைமையிலுள்ளவை. ஆனல் இவ்விரு நாடுகள் விஷயத்திலும் பிரிட்டிஷ் அரசாங்கம் அனுசரிக்கும் முறைகள் ஆப்பிரிக்காவையும் அமெரிக்காவையும் போல் அவ்வளவு தூர முள்ளனவையா யிருக்கின்றன. கெனியாவுக்குப் பிரிட்டிஷ் அரசாங்கம் பூரண சுயாட்சி கொடுக்க விரும்புகிறது. கயானவிஷயத்திலோ, ஏற்கனவே அந்நாட்டு அரசியலிலுள்ள ஜனநாயகக் கொள்கையையும் பிடுங்கிவிட விரும்புகிறது. அந்நாட்டுச் சட்டசபைக்குள்ள அதிகாரத்தைப் பறித்துக் கவர்னரைச் சர்வாதிகாரியாக்க உத்தேசித்திருக்கிறது. இவ்வேற்றுமைக்குக் காரணம் என்ன? கெனியா ஆப்பிரிக்காவிலும், கயான அமெரிக்காவிலும் இருப்பதாவது, அந்நாடுகளின் சீதோஷ்ண நிலையில் மாறுபாடாவது காரணமாயிருக்க முடியாது. உண்மைக் காரணத்தை நாம் ஒருவாறு ஊகிக்கலாம். கெனியாவில் சுயாட்சி ஏற்பட்டால் அது வெள்ளைக்காரர்களின் ஆட்சியாயிருக்கும். அங்குள்ள இந்தியர்களுக்கும், சுதேசிகளுக்கும் அரசியல் உரிமைகிடையாது. கயானவிலோ இவ்வாறன்று. அங்குள்ள இந்தியர் அரசியலில் சம உரிமைகள் அநுபவித்து வருகின்றனர். எனவே கயானவுக்குச் சுயாட்சியளித்தால் அது கலப்பாட்சியாயிருக்கும். நாளடைவில் இந்தியரின் ஜனத் தொகை பெருகி இந்தியர் ஆட்சியாகவும் மாறிவிடலாம். ஆதலின் கெனியாவுக்குப் பூரண சுயாட்சி அளிக்க வேண்டும்; கயானவில் ஏற்கனவேயுள்ள உரிமையையும் பிடுங்கிவிட வேண்டும்; இதுவே உலகமெல்லாம் புகழ் பெற்ற பிரிட்டிஷ் நீதி என்பது!

## மேட்டூர் மோசம்

மேட்டூர் தேக்கத்தின் பெயரால் நடக்கும் மோசங்களைப்பற்றி அடிக்கடி எழுதி வருகிறோம். அத்தகைய மோசங்களில் ஒன்று சென்னைச் சட்டசபையில் சென்றவாரம் விவாதிக்கப்பட்டது. மேட்டூர் அணைக்காக அரசாங்கத்தார் ஏறக்குறைய ஒரு கோடி ரூபாவுக்குச் செமன்ட் வாங்கத் தீர்மானித்து விளம்பரம் செய்திருக்கிறார்களாம். இது சம்பந்தமாக எழும் கேள்விகள் இரண்டு. அணைகட்டுவதற்குச் சுண்ணும்பை ஏன் உபயோகித்தல் கூடாது என்பது ஒன்று. செமன்ட் வாங்குவதென்றாலும் வெளிநாட்டுச் செமன்டை வாங்கலாமா என்பது இரண்டாவது. சுண்ணும்பை உபயோகித்தால் செலவு குறைவா யாகுமென்றும், சுண்ணும்பு செய்வதற்குச் சேலம் ஜில்லாவில் ஏராளமான வசதி உண்டென்றும், வேலையில்லாமல் திண்டாடும் ஆயிரக்கணக்கான ஏழைகளுக்கு வேலை கொடுக்கலாமென்றும், எகிப்து நாட்டில் நீல நதியின் பெரிய அணைக்கட்டும், சீனத்தின் பிரசித்திபெற்ற சுவரும், இந்தியாவின் பிரமாண்டமான கோயில்களும் சுண்ணும்பினல் கட்டப்பட்டவை யென்றும், இவை ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நின்று நிலவுகின்றன என்றும் ஸ்ரீமான் ஆதிநாராயண செட்டியார் எடுத்துக் காட்டினர். இதற்குச் சட்ட அங்கத்தவர் கனம் சர் சி. பி. இராமஸ்வாமி ஐயர், சீப் என்ஜியர்களான நான்கு நிபுணர்கள் செமன்டே சிறந்தது என்று தீர்ப்பளித்துவிட்டதாகப் பதிலளித்தார். ஐரோப்பிய நிபுணர்களின் தீர்ப்புக்கள் எப்போதும் ஐரோப்பிய வியாபாரிகளுக்கே அநுகூலமாயிருந்து வருவது அநுபவமாதலின், போத ஜனங்கள் இப்பதிலினல் திருப்தியடைந்து விடமாட்டார்கள்.

## யாருக்கு நன்மை?

செமன்டே உபயோகிப்பதேன்றாலும், இந்தியச் செமன்டையே வாங்க வேண்டாமா என்பது அடுத்த கேள்வி. விளம்பரத்தில் அத்தகைய நிபந்தனை எதுவும் காணப்படவில்லை. இது மட்டுமன்றி, இந்தியக் கம்பெனிகள் போட்டியிட முடியாவண்ணம் ஒரு நிபந்தனையும் சேர்க்கப்பட்டிருக்கிறது. மேற்படி ஒரு கோடி ரூபா செமன்டும் ஐந்து வருஷங்களில் கொடுக்கப்பட வேண்டும். அப்படிக் கொடுக்க ஒப்புக் கொள்ளும் கம்பெனி ஒரு லட்சம் ரூபா ஜாமீனக அரசாங்கத்தாரிடம் கட்ட வேண்டுமாம். வெளிநாட்டுக் கம்பெனிகள் கோடி கோடியாக மூலதன முள்ளவை. இந்தியக் கம்பெனிகள் அவ்வளவு பணம் படைத்தவையா யிருக்க முடியாது. எனவே இந்நிபந்தனை வெளிநாட்டுக் கம்பெனிகளுக்கே அநுகூலமானதாகும். அரசாங்கத்துக்கு உண்மையில் இந்தியக் கைத்தொழில்களை ஆதரிக்கும் நோக்கம் இருந்தால் இத்தகைய நிர்ப்பந்தங்களை ஏற்படுத்தாமல், இந்தியாவிலுள்ள செமன்ட் கம்பெனிகளிடம் தங்களுக்குத் தேவையான சரக்கைப் பகிர்ந்து வாங்கிக் கொள்ளலாம். கனம் சர் சி. பி. இராமஸ்வாமி ஐயர் மேட்டூர், பைக்காரா முதலிய திட்டங்களால் நாட்டுக்குப் பெருநன்மை செய்து விட்டதாகச் சிலர் சொல்கிறார். உண்மையில் அவர் நன்மை செய்வது வெளி நாட்டு வியாபாரிகளுக்கே என்று தோன்றுகிறது. கனம் ஐயருக்கு ஓர் உருவச் சிலை நாட்ட வருங்காலத்தில் முயற்சி நடந்தால், கையொப்ப மிடுவோரில் ஐரோப்பிய வியாபாரிகளே முதன்மையாயிருப்பார்களென்று எதிர்பார்க்கிறோம்.

## மயான வைராக்யம்

ஐக்ய மாகாணத்தில் ஸப் இன்ஸ்பெக்டர் ஒருவர் பண்டித கணேச சங்கர வித்யார்த்தி என்னும் தேசபக்தர் மீது அவதூறு வழக்குத் தொடுத்திருந்தார். இவ்வழக்கு உயர்தர நீதிமன்றத்துக்கு வந்தபோது, விசாரணை செய்த நீதிபதிகள் வழக்கைத் தள்ளியதுடன் சப்-இன்ஸ்பெக்டரின் நடத்தையைக் கண்டித்து அவர்மீது நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று குறிப்பிட்டிருந்தார்கள். எனினும் அவர்மீது அரசாங்கத்தார் நடவடிக்கை எதுவும் எடுத்துக்கொள்ளவில்லை. அவரை வேலையினின்று நீக்கவும் இல்லை. இதுகுறித்து விவாதிக்கச் சட்டசபையில் ஓர்அங்கத்தவர்அவசரப் பிரரேபணை கொண்டுவந்தார். கவர்னர் அப்பிரரேபணை கொண்டுவரக் கூடாதென்று தமதுவிசேஷஅதிகாரத்தினல் தடுத்துவிட்டார். சட்டசபையில் கவர்னர் கட்டளை தெரிவிக்கப்பட்டதும் சுயராஜ்யக்கட்சி அங்கத்தவர் எழுந்து வெளியே சென்றனர். ஆனல் அவர்கள் மீண்டும் அங்குச் செல்லப் போகிறார்களா, இல்லையா என்பதே கேள்வி. கவர்னர் சட்டசபைக்கு எவ்வளவு மதிப்புக் கொடுத்துள்ளார் என்பது வெளிப்படை. ஆனல் கவர்னர்களும், கவர்னர் ஜெனரல்களும் எவ்வளவு தான் புத்தி கற்பித்தாலும் நம்மவர்கள் மீண்டும் மீண்டும் சட்டசபைக்கே சென்று முட்டிக் கொள்கிறார்கள். சட்டசபை ஒரு மாயை என்பது மிகப் பொருத்தமாகும்.

## வாழ்த்துக் கூறுகிறோம்

சில பெண் மக்களைத் தெய்வங்களின் பேரால் விபசார வாழ்வுக் காளாக்கும் பொட்டுக்கட்டுதல் என்னும் கொடுமையை ஒழிக்க அரசாங்கத்தார் சட்டம் செய்ய வேண்டுமென்று டாக்டர் முத்துலக்ஷ்மி அம்மாள் அவர்கள் கொண்டுவந்த தீர்மானம் சென்னைச் சட்டசபையில் பெரும்பான்மை வாக்குகளால் நிறைவேறியது. அம்மையாரின் முயற்சி தீர்மான அளவிலேனும் வெற்றி பெற்றது குறித்து அவருக்கு வாழ்த்துக் கூறுகிறோம். அரசாங்கத்தாரின் சார்பாக ஸர் சி. பி. இராமஸ்வாமி ஐயர் அளித்திருக்கும் பதிலைப் பார்க்கும்போது அவர்கள் அத்தீர்மானத்தை விரைவில் நடை முறைக்குக் கொணருவார்கள் என்று நம்ப இடமில்லை. நடை முறைக்குக் கொணருவதில் ஏதோ கஷ்டங்கள் இருக்கின்றனவாம். மேட்டூர், பைக்காரா திட்டங்களைவிட இதில் கஷ்டங்கள் அதிகமா என்று வினவுகிறோம். சமூக சீர்திருத்தத்துக்கு அரசாங்கம் முட்டுக்கட்டைபோடுவது வெள்ளிடை மலை. அம்மையார் மேலும் மேலும் முயன்று இப்பெருந்தீமையைத் தொலைப்பதில் வெற்றிபெறுவார்களென நம்புகிறோம். நாட்டார் அவருக்குத் துணை நிற்றல் வேண்டுமென்று நாம் சொல்லவேண்டுவதில்லை.

# காந்தியடிகள்

## உண்மையோடியைந்த வாழ்வு

### பாகம் 4. அத்தியாயம் 24.

### ஸுலூ 'கலகம்'

ஜோகானிஸ்பர்க்கில்நிலைபெற்று விட்டேனென்று எண்ணிய பின்னரும் எனக்கு நிலையான வாழ்க்கை இல்லாமற் போயிற்று. அமைதியான வாழ்க்கை நடத்த வேண்டுமென நான் எண்ணத் தொடங்கிய போது எதிர் பாராத நிகழ்ச்சி ஒன்று நேரிட்டது. நேட்டாலில் ஸுலூ கலகம்ஏற்பட்டிருப்பதாகப் பத்திரிகைகளில் செய்திவெளியாயிற்று. ஸுலூக்களிடம் எனக்கு எவ்வகை விரோதமுமில்லை. அவர்கள் இந்தியர் எவருக்கும் எவ்வகைத் தீங்கும் செய்ததில்லை. 'கலக'த்தைப் பற்றியுங் கூட எனக்குச் சந்தேகம் தோன்றாமல் இல்லை. ஆனல் அக்காலத்தில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் உலகத்தின் நன்மைக்காகவே இருந்தது என்று நான் நம்பினேன். என் உள்ளத்திலிருந்த உண்மையான அரசாங்க விசுவாசமானது ஏகாதிபத்தியத்துக்குக் கேடு நினைத்தலே இயலாமற் செய்தது. ஆதலின் 'கலக'த்தின் நியாய அநியாயங்கள் என் தீர்மானத்தைப் பாதிப்பதற்கில்லை. நேட்டாலில் தொண்டர் பாதுகாப்புப் படை ஒன்றிருந்தது. அதில் இன்னும் அதிக மனிதர்கள் சேர்க்கப்படலாம். அப்படை கலகத்தை அடக்குவதற்காகத் திரட்டப்பட்டு விட்டது என்று பத்திரிகைகளில் படித்தேன்,

நான் நேட்டாலுடன் நெருங்கிய தொடர்புள்ளவனதலால் நேட்டாலின் பிரஜையாகவே என்னைக் கருதினேன். ஆதலின் அவசியமானல் இந்திய சைன்ய சேவைப் படையொன்றை அமைக்கத் தயாராயிருப்பதாகக் கவர்னருக்கு எழுதினேன். அதை ஏற்று அவர் உடனே பதில் விடுத்தார்.

என் சேவையை இவ்வாறு உடனே ஏற்றுக்கொள்வார்களென்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆயினும் அதிர்ஷ்ட வசமாக, கடிதம் எழுதுவதற்கு முன்னலேயே அவசியமான ஏற்பாடுகள் எல்லாம் செய்திருந்தேன். என் சேவை அங்கீகரிக்கப்பட்டால் ஜோகானிஸ்பர்க் குடித்தனத்தைக் கலைத்து விடுவதென்றும், போலக் சிறு வீடு ஒன்றுக்குப் போகவேண்டுமென்றும், கஸ்தூரிபாய் போனிக்ஸுக்குச் சென்று தங்கவேண்டுமென்றும் தீர்மானித்திருந்தேன். இத்தீர்மானத்தில் அவளுடைய பூரண ஒத்துழைப்பைப் பெற்றிருந்தேன். இம்மாதிரி விஷயங்களில் அவள் எப்போதேனும் குறுக்கே நின்றதாக எனக்கு ஞாபகமேயில்லை. ஆதலின் கவர்னரிடமிருந்து பதில் வந்ததும் வீட்டுச் சொந்தக்காரனுக்கு வழக்கமான ஒருமாத அறிக்கை கொடுத்தேன். சாமான்களில் சிலவற்றைப் போலக்கின் வசம் விட்டு விட்டுச் சிலவற்றைப் போனிக்ஸுக்கு அனுப்பினேன்.

பின்னர், டர்பனுக்குச்சென்று, மனிதர்கள் வேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டேன். பெரிய படை தேவையாயில்லை. இருபத்து நான்கு பேர் அடங்கிய படை அமைக்கப்பட்டது. அவர்களில் என்னைத் தவிர நால்வர் குஜராத்தியர்; ஒருவர் சுயேச்சையுள்ள பட்டாணி; மற்றவர்கள் எல்லாரும் ஒப்பந்தம் நீங்கிய தென்னிந்தியத் தொழிலாளிகள்.

வேலை சுலபமாக நடப்பதற்காக எனக்கு ஓர் அந்தஸ்து அளிப்பதற்கும், வழக்கத்திலிருந்த முறையை யனுசரித்தும் தலைமை வைத்திய அதிகாரி என்னைத் தாற்காலிகமாக 'ஸார்ஜண்ட் மேஜர்' ஆக்கினர். அவ்வாறே நான் குறிப்பிட்ட மூவரை 'ஸார்ஜண்ட்'களாவும், ஒருவரைக் 'கார்ப்போரல்' ஆகவும் செய்தார் அரசாங்கத்தார் எங்களுக்கு ஒழுங்கு முறைக்குரிய உடைகளும் அளித்தார்கள். ஏறக்குறைய, ஆறு வாரம் எங்கள் படை சேவை செய்தது. 'கலக'ப் பிரதேசத்தையடைந்ததும் 'கலகம்' என்று சொல்வதற்கே அங்கே ஒன்றுமில்லையென்று கண்டேன். எதிர்த்து நிற்பவர் யாரையுங் காணேம். இச்சிறுகலவரம் பெருங்கலகமாக மிகைப் படுத்திச் சொல்லப்பட்டதின் காரணம், ஸுலூக்கள் மீது விதிக்கப்பட்ட ஒரு புதிய வரியைக் கொடுக்க வேண்டாமென்று அவர்களுக்கு ஸுலூ தலைவன் ஒருவன் யோசனை கூறியதும், வரி வசூல் செய்யப்போன ஸார்ஜண்டை அடித்துவிட்டதுமே யாகும். விஷயம் எதுவாயினும், என் அநுதாபம் எல்லாம் ஸுலூக்கள் பக்கலிலேயே இருந்தது. சைன்யத்தின் தலைமை ஸ்தானத்தை அடைந்ததும், காயமுற்ற ஸுலூக்களுக்குப் பணிவிடை புரிவதே எங்கள் வேலை யென்றறிந்து நான் அளவற்ற மகிழ்ச்சியடைந்தேன். அங்குத் தலைமையிலிருந்த வைத்திய உத்தியோகஸ்தர் எங்களை வரவேற்றார். வெள்ளைக்காரர்கள் காயமடைந்த ஸுலூக்களுக்கு மனதாரப் பணிவிடை செய்வதில்லை யென்றும், அவர்களுடைய புண்கள் அழுகிக் கொண்டிருக்கின்றன வென்றும், என்ன செய்வதென்று தெரியாமல் தாம் திகைத்துக் கொண்டிருந்ததாகவும் அவர் கூறினர். அந்த ஏழை ஜனங்கள் மீதிரங்கிப் பகவானே எங்களை அனுப்பிவைத்திருப்பதாக அவர் மகிழ்ச்சியுடன் தெரிவித்தார். இரணகட்டும் சாமான்கள் முதலியன எங்களுக்குக் கொடுத்துத் தாற்காலிக வைத்தியசாலைக்கு அழைத்துச்சென்றார். ஸுலூக்கள் எங்களைக் கண்டு மகிழ்ச்சியடைந்தனர். வெள்ளைக்கார சோல்ஜர்கள் வேலிக் கம்பிகளின் வழியாகஎட்டிப்பார்த்து அவர்களுடைய இரணங்களைக் கட்டவேண்டாமென்று சொல்வார்கள். நாங்கள் அவர்கள் பேச்சுக்குச் செவிகொடுப்பதில்லை யாதலின் அவர்கள் கோபமடைந்து ஸுலூக்கள் மீது சொல்லத் தகாத வசை மொழிகளைப் பொழிவார்கள்.

நாளடைவில் நான் இந்த சோல்ஜர்களுடன் நெருங்கிப் பழகலானேன். அவர்கள் எங்கள் வேலையில் தலையிடுவதை நிறுத்தினர்கள். சைன்யத்தின் பெரிய உத்தியோகஸ்தர்களில் கர்னல் ஸ்பார்க்ஸ், கர்னல்வைலி இவ்விருவரும் இருந்தனர். இவர்கள் 1896ல் என்னைப் பலமாக எதிர்த்தவர்கள். என்னுடைய நடக்கையைக் கண்டு அவர்கள் ஆச்சரிய மடைந்தார்கள். என்னைப் பார்ப்பதற்கென்று தனிப்பட வந்து எனக்கு வந்தனங் கூறினர்கள். பின்னர் ஜெனரல் மாக்கன்ஸியிடமும் என்னை அழைத்துச் சென்று அவருடன் அறிமுகம் செய்து வைத்தார்கள். இவர்களெல்லாரும் இராணுவ சேவையைத் தொழிலாகக் கொண்டவர்களென்று நேயர்கள் எண்ண வேண்டாம். கர்னல் வைலி டர்பனில் பெயர் பெற்ற வக்கீல். கர்னல் ஸ்பார்க்ஸ் டர்பனில் ஒரு பெரிய கசாப்புக் கடையின் சொந்தக்காரர். ஜெனரல் மாக்கன்ஸி நேட்டால் விவசாயிகளில் பிரசித்தி பெற்ற ஒருவர். இவர்களெல்லாரும் தொண்டர் சேவைக்காக முன்வந்து அம்முறையிலே இராணுவப்பயிற்சி பெற்றவர்களேயாவர்.

நாங்கள் பணிவிடை செய்தவர்கள் சண்டையில் காயமடைந்தவர்களல்லர். அவர்களில் ஒரு பகுதியார் சந்தேகத்தின்மீது கைதிகளாக்கப்பட்டவர். ஜெனரல் அவர்களுக்குக் கசையடி தண்டனை விதித்தார். கசையடியினல் கெட்ட இரணங்கள் உண்டாகி யிருந்தன. அவற்றிற்குச் சிகிச்சை செய்யாதபடியால் அவை அழுகத் தொடங்கிவிட்டன. மற்றொரு பகுதியார் சிநேக ஸுலூக்கள். 'பகைவர்'களிடமிருந்து வேறு பிரிக்க அவர்களுக்குப் பட்டயங்கள் கொடுக்கப் பட்டிருந்தனவாயினும் அவர்கள் தவறுதலாக சோல்ஜர்களால் சுடப்பட்டவர்கள்.

இவ்வேலையை யல்லாமல், வெள்ளைக்கார சோல்ஜர்களுக்கும் நான் மருந்து கலந்து கொடுக்க வேண்டியிருந்தது. இஃது எனக்கு மிகவும் சுலபமானவேலை. டாக்டர் பூத்தின் சிறுவைத்திய சாலையில் நான் ஒரு வருஷம் பயிற்சி பெற்றிருந்தேனல்லவா? இவ்வேலையின் மூலம் பல ஐரோப்பியர்களுடன் நெருங்கிய பழக்கம் ஏற்பட்டது.

அதிவிரைவாகப் பிரயாணம் செய்துகொண்டிருந்தஒரு படையுடன் நாங்கள் இணைக்கப்பட்டிருந்தோம். எங்கெங்கே அபாயம் என்று அறிவிக்கப்பட்டதோ அங்கெல்லாம் போகும்படி அப்படைக்குக்கட்டளை. பெரும்பாலும் அப்படை குதிரைப்பட்டாளங்களடங்கியது. படைபோகு மிடத்துக் கெல்லாம் நாங்கள் தோள்களில் காயமடைந்தவர்களின் பல்லக்குகளைச் சுமந்து கொண்டு போகவேண்டும். இரண்டு மூன்று தடவை தினம் நாற்பது மைல் நாங்கள் பிரயாணம் செய்ய வேண்டியிருந்தது. ஆனல் நாங்கள் எங்கே சென்றாலும் இறைவன் திருப்பணியே செய்யவேண்டியிருந்தது குறித்து நன்றியுள்ளவனயிருக்கிறேன். தவறுதலாகக் காயப்படுத்தப்படும் சிநேக ஸுலூக்களைப் பல்லக்குகளில் சுமந்து தலைமை ஸ்தலத்துக்குக்கொண்டுவந்து அவர்களுக்குப்பணிவிடை செய்வதே எங்கள் வேலையாயிருந்தது.

## பத்திரிகைத் திருட்டு ✓

"நவசக்தி"யில் ஒரு திங்களுக்கு முன்னர் வெளியான கட்டுரையொன்று சென்னையில் பிரசுரமாகும் நேர்மையான தினசரி யொன்றில் சென்றவாரம் வெளியிடப்பட்டிருந்தது. அதன்கீழே வெளியூர் வாரப்பத்திரிகை யொன்றின் பெயர் பொறிக்கப்பட்டிருந்தது கண்டு நாம் வியப்புற்றோம். அவ்வாறப் பத்திரிகை அக்கட்டுரையை வெளியிட்டு அதன்கீழ் "நவசக்தி"யின் பெயர் பொறியாது விட்டிருக்க வேண்டுமென ஊகித்துக் கொண்டோம். ஒரு பத்திரிகையில் வெளியாகும் கட்டுரை முதலியவற்றை மற்றப் பத்திரிகைகள் எடுத்து வெளியிடுவது பத்திரிகை தர்மத்துக்குச் சாலப் பொருந்த முடையதே யாகும். ஆனல் அக்கட்டுரை முதலியன இப்பத்திரிகையி லிருந்து எடுக்கப்பட்டன எனக் குறிப்பிடாமல் விடுவது பத்திரிகை அறத்துக்கு மாறுபட்டதாகும். சில பத்திரிகைகள் இத்தகைய 'திருட்டு'த் தொழிலைக் கையாளுவதால் நேர்மையான பத்திரிகைகளின் பெயரும் கெடுகிறது. தமிழ் நாட்டுப் பத்திரிகைகள் ஒழுக்கங் கடைப்பிடிக்குமாக.

# கலம்பகம்

ஒரிசா வெள்ளக் கஷ்ட நிவாரண நிதிக்கு மன்னர் பிரான் 500 ரூபா அளித்துள்ளார்.

o o o

அன்னிபெசண்டம்மையார் தென்னாடெங்கும் சென்று ஒற்றுமைப் பிரசாரம் செய்யப் போகிறாராம்.

o o o

துருக்கிக் குடியரசின் அக்கிராசனபதவிக்கு முஸ்தபா கமால் பாட்சா மீண்டும் ஏகமனதாகத் தேர்ந் தெடுக்கப்பட்டிருக்கிறார்.

o o o

மாஜி கெய்சரின் இரண்டாவது மகன் பிரின்ஸ் ஜியார்ஜ் வில் ஹேம் கரோலாத் ஒரு மோட்டார்சைகிலில் அகப்பட்டு இறந்தானாம்.

o o o

எகிப்து அரசர் பாரிசிலுள்ள மருதியைப் பார்வையிட்டு அதன் கட்டிட நிதிக்கு ஒரு லட்சம் பிராங் நன்கொடை யளித்திருக்கிறார்.

o o o

நாகபுரி குடி அரசுப் படைத்தலைவராகிய வீர அவாரி 15 நாட்களாகச் சிறையில் உண்ணாவிரதமிருந்து வருகிறாராம். காரணம் தெரியவில்லை.

o o o

கோமின்டாங்கின் மாஜி அக்கிராசனரான வாங்-சிங்-வே என்பாரைத் தலைவராகக் கொண்டு காண்டனில் புதியதொரு தேசீய அரசாங்கம் ஏற்பட்டிருக்கிறது.

o o o

இரங்கூனுக் கடுத்த கய்யான் பகுதியைச் சேர்ந்த மிமி என்ற கிராமத்தில், சென்ற மாதம் ஒரு பன்றி ஈன்ற குட்டி யானைத் துதிக்கையுடன் காணப்படுகிறதாம்.

o o o

சிலநாளாகச் சென்னையிலும் அதைச்சுற்றியுள்ள இடங்களிலும் மழை பெய்து வருவதால் சென்னைக்கு நீர்வழங்கும் புழலேரிக்குப் போதுமான தண்ணீர்வந்திருக்கிறது.

o o o

தென்னாடெங்கும் தீபாவலியை யொட்டி அகில இந்திய சர்க்கா சங்கத்தின் ஆதரவிலுள்ள கதர்க் கடைகளில் சுமார் தொண்ணூறாயிரம் ரூபா மதிப்புள்ள கதர் விற்பனையாயிருக்கிறது.

o o o

இராஜகோட் சமஸ்தான சட்டசபை மண வயது ஆண்களுக்கு 19 ஆகவும் பெண்களுக்கு 15 ஆகவும் இருக்க வேண்டுமென்றும் சம்மத வயது 16 ஆக இருக்க வேண்டுமென்றும் தீர்மானித்திருக்கிறது.

o o o

சென்ற செவ்வாய்க் கிழமை சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரிக் கருகே ஒரு மோட்டார் பஸ் சுவரில் மோதியதால் ஏற்பட்ட விபத்தில் காயமடைந்த கண்டக்டர் வைத்தியசாலையில் மாண்டு போனான்.

o o o

திரிசிராப்பள்ளி நகரசபையின் தலைவராக ஸ்ரீமான் டி.எம். நாராயணசாமிப் பிள்ளை எம். எல். சி. யும், ஸ்ரீரங்கம் நகரசபையின் தலைவராக ஸ்ரீமான் கே.வி. அரங்கசாமி ஐயங்காரும் தேர்ந்தெடுக்கப்பட் டிருக்கின்றனர்.

o o o

துருக்கியில் இப்போது தான் முதன் முதலாக ஜனக் கணிதை எடுக்கப்பட்டது. அதில் துருக்கியில் ஒரு கோடியே 40 லட்சம் பேரும் கான்ஸ் தாந்தி நோபிளில் 8,50,000 பேரும் வதிவதாகத் தெரியவந்தது.

o o o

சென்னையில் ஓடும் கூவம் நதியைச் சீர்ப்படுத்துவதற்காக அரசாங்கத்தார் ஒரு லட்சத்தி நாற்பதினாயிரம் ரூபா சென்ற சட்டசபைக் கூட்டத்தில் கேட்டார்கள். இச்செலவுக்கு அநுமதி கொடுக்கப்பட்டது.

o o o

காஞ்சி ஏகாம்பரநாதர் கோயிலில் வைக்கப்பட்ட நீலகண்ட சிவாசாரியார் திரு உருவச் சிலையை எடுக்கவேண்டுமென ஒரு வழக்கு நடைபெற்று வருகிறது. இப்போது எவரோ அச்சிலையின் கையை உடைத்து விட்டாராம்.

o o o

மகாத்மாகாந்தி தில்லியிலிருந்து புறப்பட்டுச் சபர்மதி சேர்ந்து அங்கிருந்து பம்பாய் சென்று, கப்பல் வழியாக இலங்கைக்குப் புறப்பட்டு விட்டார். 10 வ. இலங்கை போய்ச் சேர்வார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

o o o

மகாமகோ பாத்தியாய உ. வே. சாமிநாத ஐயர் 'சங்கக்காலம்' என்பதுபற்றிச் சென்னைச் செனட் மண்டபத்தில் நவம்பர் 9 12, 16, 18-ந் தேதிகளிலும் டிசம்பர் 6, 8, 12, 14, 17-ந் தேதிகளும் மாலை 6 மணிக்கு உபந்நியாசம் செய்வார்.

o o o

இங்கிலாந்தில் சென்ற வாரத்தில் 300 நகரசபைகளுக்குத் தேர்தல்கள் நடந்தன. சென்ற வருஷத்தைவிடத் தொழிற்கட்சியார் 105 அதிக ஸ்தானங்கள் பெற்றனர். கன்சர்வேடிவ் கட்சியார் 70 பீடங்களையும், லிபரல் கட்சியார் 33 பீடங்களையும் இழந்தனர்.

o o o

சென்ற 6வ இரவு மதுரையை அடுத்த அழகர் கோயிலுக்கு 12 பேரடங்கிய இரு கூட்டத்தார் சென்று திருப்புகையில் 6 பேரடங்கிய ஒரு கூட்டத்தார் மற்றொரு கூட்டத்தைத் தாக்கிவிட்டு ஓடிவிட்டனராம். ஓடியவர்களைப் போலீசார் தேடிவருகின்றனராம்.

o o o

அமெரிக்காவில் ஹில்ஸ்டேல் எனும் நகரில் நகர பரிபாலனத்தார் சாக்கடை சுத்த வேலைக்காகச்சில ஆமைகள் வளர்க்கின்றனராம். அவைகளைச் சாக்கடைக் குழாய் அடைத்திருக்கும் இடங்களில் விட்டால் மண்ணைச் சுலபமாய்த் தோண்டிக் கொண்டு வெளி வந்து விடுகின்றனவாம்.

o o o

இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கும் இடையிலுள்ள கடலை நீந்திக் கடக்கப் பலர் போட்டி போடுவதுண்டு. இப்போது அதை திரு. சாவர்ட் எனும் ஓர் ஆங்கிலேயர் சைக்கிளிலேயே கடக்க முயல்கிறாராம். சைக்கிளில் நீரில் ஓடக்கூடிய இயந்திரங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றனவாம்.

o o o

ஸர் ஜே. ஸி. போஸ் சென்ற ஞாயிற்றுக் கிழமை சென்னை வந்து சேர்ந்தார். அன்று பச்சையப்பன் கலாசாலையிலும், திங்கள், செவ்வாய்களில் விக்டோரியா மண்டபத்திலும் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். இன்று கோகலே மண்டபத்தில் உபந்நியாசம் செய்து விட்டு இரவு புறப்படுகிறார்.

o o o

ருஷிய சோவியத் குடியரசின் பத்தாவது வருஷக் கொண்டாட்டம் மாஸ்கோவில் 7வ யன்று மிகச் சிறப்புடன் தொடங்கியது. சுமார் பத்துலட்சம் ஜனங்கள் அன்று கொண்டாட்டத்தில் கலந்து கொண்டார்களாம். அன்னிய நாட்டிலிருந்து வந்த கௌரவ விருந்தினரில் ஸ்ரீமான் சக்லத் வாலாவும் ஒருவராம்.

o o o

அலகாபாத்தில் ஒருவர் தமது வழக்கொன்றில் எதிர் தரப்புக்காக வக்கீலாக இருந்தவரிடம் சென்று வழக்கு தோற்றதற்கு நீர் தான் காரணமெனக் கூறினாராம். வக்கீல் தம் வீட்டை விட்டு வெளியே போம்படி கூறினாராம். இருவருக்கும் சச்சரவு உண்டாகவாதி, வக்கீலின் கையைக் கடித்துவிட்டு ஓடிவிட்டாராம்.

o o o

இராமநாதபுரத்தைச் சேர்ந்த சங்கரன் பிள்ளை, சுப்புக்கண்ணுசாரி, காசிம் ராவுத்தர் ஆகிய மூவர் 7-ந்தேதி நீலன் சிலையைத் தகர்க்கும்போது போலீசாரால் கைது செய்யப்பட்டனர். நேற்று 8வ பண்ருட்டியைச் சேர்ந்த கிருஷ்ண மூர்த்தி ஐயர், ஜனப் மகம்மது உஸ்மான் சாகிபு ஆகியஇருவரும நீலன்சிலையைத் தகாக்கையில் கைது செய்யப்பட்டனர்.

o o o

ஒக்ளகாமாவில் ஒரு மாது தனது புருஷனுடன் தனது விவாகத்தை ரத்து செய்யுமாறு தொடர்ந்துள்ள வழக்கில் சிறந்த வக்கீலென்று தான் கருதும் தனது கணவனையே தனக்கு வக்கீலாக ஏற்பாடு செய்திருக்கிறாள். புருஷன் அடிக்கடி சண்டை போடும் இயற்கை உள்ளவனன்று புருஷனுன அவ்வக்கீல் அம்மாதுக்காக விண்ணப்பம எழுதியிருக்கிறார்.

o o o

சென்ற ஜனவரியில் மாண்ட்ரீலில் ஒரு சினிமா கட்டிடம் தீப்பற்றி எரிந்ததில் 78 குழந்தைகள் எரிந்துபோயின. அதன் சம்பந்தமாகக் கம்பெனிமீது தொடுக்கப்பட்ட வழக்கில் சினிமா சொந்தக்காரர் இரண்டு வருடக் கடுங்காவல் தண்டனையும் அதில் வேலை செய்துகொண்டிருந்த மற்றிருவர் ஒருவருடக் கடுங்காவல் தண்டனையும் விதிக்கப்பெற்றனர்.

o o o

"மார்க்கெ ரெட்டு டாலர்" என்ற கப்பல், 4000 மைல் கரை தாணுகத் திண்டாடி ஒதுங்கிய ஜப்பானிய மீன பிடிக்கும் படகு ஒன்றைக் கண்டு பிடித்ததாம், அப்படகில மனிதஎலும்புக்குவியல்களும் இருபிணமுமிருந்தனவாம். பிணமாக இருந்த இருவர் உணவுக்காக மற்ற மனிதர்களைத் தின்றிருக்க வேண்டுமென வைத்தியர்கள் அபிப்பிராயப் படுகிறார்களாம்

o o o

பம்பாய் பரேல் கிருஷ்ணபில்டிங் கெ. 3-ல் அமைத்துள்ள ஸ்ரீ ரமண ஸச்சிதானந்த சபையினுதரவில் 6-11-27 மாலை 4-மணிக்கு மாயவரம் மாஸ்டர் V. N. சிவராமய்யர் அவர்கள் வாய்ப்பாட்டும் ஸ்ரீமான் A. நாராயணய்யர் பிடிலும், ஸ்ரீமான் V. A. சுப்பிரமணிய ஐயர் மிருதங்கமும் நிகழ்ந்தது. திரளான ஜனங்கள குழுமியிருந்தனர். கச்சேரியின் இறுதியில் வாய்ப்பாட்டு மாஸ்டர் V. N சிவராமமையர் அவர்களுக்கு ஸமாஜத்தலைவர் புகழுரை கூறி பொற்பதக்கம பரிசிலளித்தார் என நமது நிருபர் எழுதுகிறார்.

o o o

சென்ற திங்கட்கிழமையில் சென்னைக் கோகலே மண்டபத்தில் டாக்டர் பெசண்டம்மையாரை வரவேற்று அவருடைய ஊழியங்களைப் பாராட்டுவதற்காக ஸர் ஸி. பி. இராமஸ்வாமி ஐயரின் தலைமையில் ஒரு கூட்டம் நடந்தது. ஸ்ரீமான்கள் ஏ. அரங்கசாமி ஐயங்கார், சத்தியமூர்த்தி, அரங்கநாத முதலியார் முதலியோர் அம்மையாரின் ஊழியங்களைப் பாராட்டிப் பேசினார்கள்.

o o o

போல்ஷிவிக் ஆட்சியின் பத்தாவது வருடக் கொண்டாட்டத்தின் ஞாபகார்த்தமாய் போல்ஷிவிக் அரசாங்கத்தார் தங்களுக்கு எதிராகப் புரட்சி செய்ததற்காக 1923-க்கு முன் தண்டனை யடைந்தவர்களையெல்லாம் விடுதலை செய்துவிட்டனர். அதற்குப்பின், மரண தண்டனையடைந்தவர்களுக்கு 10வருட கடுங்காவலாகவும் மற்றவர்கள் தண்டனையில் குறைவும் செய்யப்படுமாம்.

o o o

அலகாபாத்தைச் சேர்ந்த ஈடா என்றவிடத்திலுள்ள வக்கீல் சங்கஅறையில் வக்கீல்களுக்குள் வாக்குவாதம் பலத்து இறுதியில் செருப்பும், தடியும் பிறவும் உபயோகிக்கப்பட்டனவாம் இதன்மேல் குமார்மாவசிங் என்பார் மற்ற இருவக்கீல் மீது வழக்குத் தொடுத்தாராம். மாஜிஸ்ட்ரேட் அவரில் ஒருவரை விடுதலை செய்து மற்றொருவருக்கு 200 ரூபா அபராதம் விதித்தாராம்.

o o o

புதுக்கோட்டையில் ஆரோக்கிய சாமி யென்ற மோட்டார் டிரைவர் டிக்கட் கொடுக்கும் நடேசன் என்றவன் மீதிருந்த விரோதத்தால் இருவரைத் துணை சேர்த்துக்கொண்டு நடேசன் தலைமீது (பெட்ரோல்) மண்ணெண்ணெயை ஊற்றித் தீ வைத்துவிட்டு ஓடி விட்டானும். நடேசன் வைத்தியசாலையில் இருக்கிறான். ஆரோக்கிய சாமியும் துணைவர்களும் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள்.

o o o

அரிக்கன்:— "தீபாவலி" யன்று இங்குள்ள கடைகளிலிருக்கும் அன்பர்கள் யாவரும் கதர் உடை அணிந்திருந்தது குறிப்பிடத்தக்கது. அன்று இரவு மெ மு. பழ. கடை அதிபர் நடராஜன் செட்டியாரவர்கள் தலைமையில் திருவாளர் அ. ஞானசம்பந்தன் செட்டியார் "அடிகளின் ஆணை" என்பது பற்றியும் லெ. சோமசுந்தரன் 'கதர்' என்பதுபற்றியும் விரிவுரை நிகழ்த்தினார்கள் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

o o o

இராசிபுரம் செம்மலைப் படையாச்சித் தெருவில் குமரப் படையாட்சி மனைவி ஆராயம்மாள் பூரண கர்ப்பிணியா யிருந்து சுமார் 4 நாட்களாகப் பிரசவ வேதனைப்பட்டு அக்டோபர் மாதம் 30-ந் தேதி இரவு மரணமடைந்தாள். மறுநாள் மயானத்தில் குழந்தையை வேறாக எடுத்தபோது உடல் ஒன்றாகவும், கழுத்துக்கு மேல் 2 முகமும் 4 கண்களும், 4 காதும் 2 வாயும் 2 மூக்கும் 1 தலையுமுள்ள ஓர் ஆண் குழந்தை இருந்ததாம்.

o o o

சென்ற 3வ பம்பாயினின்றும் பகல் 3-மணிக்குக் கல்கத்தா நோக்கிப் புறப்பட்ட மெயில், வைகறை 3-மணிக்குகெய்காலுக்கும் அகோலாவுக்கும் இடையில் ஓடிக்கொண்டிருக்கையில் ஒரு வண்டியில் புகை காணப்பட்டதாம். வண்டி நிறுத்தப்பட்டுப் பிரயாணிகள் எல்லாம் இறங்கிய சிறிது நேரத்தில் எல்லா வண்டிகளும் எரிந்துவிட்டனவாம். பிரயாணிகள் வைத்திருந்த பொருள்களைவண்டியிலேயே இழந்து உயிர்மட்டும் தப்பினராம்.

o o o

இந்திய மந்திரி ஆபீஸ், கன்னிமேயோ இந்தியர்களை இழிவுபடுத்தி எழுதிய புத்தகத்தில் 5,000 பிரதிகள் வாங்கி ஆங்கிலேயர்களுக்கு வழங்கியதாகவும், இந்தியாவில் உத்தியோகம் புரிந்து விட்டுப் பென்ஷன் பெற்ற ஆங்கிலேயர் சங்கமொன்று கன்னிமேயோவுக்குத்துணையிருந்த தாயும் சீமையிலிருந்து திரும்பிய பிரபல இந்தியர் ஒருவர் தெரிவித்ததாக இந்தியன் "டெயிலிமெயில்" கூறுகிறது.

o o o

தலைச் சேரியை அடுத்துள்ள வயலத்தில் ஒரு தீய வகுப்புப் பெண் விரும்பிய ஒருவனுக்கு மணமுடிக்க அவள் பெற்றோர்கள் மறுத்து, மற்றொருவனுக்கு மணஞ் செய்விக்க ஏற்பாடு செய்திருந்தார்களாம். பெண் தன் விருப்பம் நிறைவேறமுடியாதபோது இறப்பதே நலன் என எண்ணிக் கிணற்றில் விழுந்து விட்டாளாம். அக்கிணற்றில் போதிய தண்ணீரின்மையால் அவள் உயிர் போகவில்லையாம். பெற்றோர்கள, அவளை எடுத்து அவள் விரும்பியவனுககே மணஞ் செய்வித்தனராம்

o o o

சின்னகாஞ்சி புரத்தில் சாலிய வகுப்பைச் சேர்ந்த ஒருவன் அவ்வூர் விபசாரி ஒருத்தியின நகையையும் பொருளையும் அபகரிக்கும் நோக்கோடு சென்ற மாதக் கடைசியில் ஓர் இரவு அவளுடன் தங்கி அவளைக கத்தி கொண்டு வெட்டினனும். இருட்டில் கத்தி வெட்டு குறித்தவிடத்தில் விழத் தவறிய போது அவள் கூச்சலிட்டாளாம். அதைக் கேட்டுவெளிஜனங்கள் உள்ளேவந்துஅவனைப் பிடித்துப் போலீசார் வசம் ஒப்புவித்தனராம். குத்தியவன் போலீஸ் காவலிலும் குத்துண்டவள் வயித்தியசாலையிலு மிருக்கின்றனராம்.

o o o

தில்லியில் நடந்த ஒரு பொதுக்கூட்டத்தில் ஸ்ரீமான் எஸ். சீனிவாசய்யங்கார் கல்கத்தா ஒற்றுமைத் தீர்மானங்களை ஆதரித்துப் பேசும்போது, ஹிந்துக்கள் பசுவதை விஷயத்தில் சகிப்புத் தன்மை காட்ட வேண்டுமென்றும், பூர்வகாலத்து ஆரியர்கள் பசுக்களைப் பலிகொடுத்தார்கள் என்றும் சொன்னாராம். உடனே "அது தப்பு; பொய்; ஹிந்துக்களின் மனதை நீர் புண்படுத்தி விட்டீர்" என்ற கூச்சலும்குழப்பமும் நேர்ந்ததாம். ஸ்ரீமான் ஐயங்கார் தாம் கூறியதை வாபீஸ் வாங்கிக்கொண்டு கூட்டத்தில் அமைதி நாட்டினாராம்.

o o o

பனகால் ராஜா மீது ஸ்ரீ ஓ. கந்தசாமி செட்டியார் தொடுத்திருந்த வழக்கில் சென்ற ஆண்டில் ஜஸ்டிஸ் பீஸ்லி ஒரு தம்பிடி நஷ்டஈட்டுக்குத் தீர்ப்பளித்தது நினைவிருக்கலாம். ஸ்ரீ கந்தசாமி செட்டியார் அதன்மேல் அப்பீல் செய்திருந்தார். அப்பீல் பிரதமநீதிபதி கூட்ஸ்டிராட்டர், நீதிபதி அனந்த கிருஷ்ணய்யர் இவர்கள் முன்பு விசாரணைக்கு வந்தது. வாதி, பிரதிவாதி இருவரும், ஒருவருடைய நடக்கையையும், கண்யத்தையும் பாதிக்கக் கூடியதென்று பொருள் படக்கூடியவாறு இன்னொருவர் பேசியவற்றை வாபீஸ் வாங்கிக் கொண்டு ராஜியாகப் போனதாக அறிவிக்கப்பட்டது எனவே அப்பீல் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது.

o o o

சென்ற செவ்வாய் புதனில் சென்னைத் துறைமுகம் கொந்தளிப்பாயிருந்தது. அலை 40 அடி உயரம்கிளம்பியது. சுழற்காற்றுமடித்துக்கொண்டிருந்தது. இதன் வேகம் பெத்ரிகுண்டா, ஆரம்பாக்கம், நெல்லூர், அதைச் சார்ந்த இடங்களில் கோரமான பயனையளித்தது. நெல்லூரில் உள்ள எல்லா வீடுகளும் கூரையில்லாமலாயின; பல அடியோடு அழிந்தன. அங்கிருந்த ஒரு தொழிற்சாலை அடியோடு அதில் வேலை செய்திருந்தவர்களோடு அழிந்தது. அங்கிருந்த மரங்களிற் பல விழுந்தன: தப்பி நின்றவை கொம்பாகக் காணப்படுகின்றன. நெல்லூரிலும் அதைச் சேர்ந்த கிராமங்களிலுமட்டும் 300 பேருக்குக் குறையாமல் இறந்திருக்கலாமெனக் கூறப்படுகிறது. பொருட் சேதத்துக்கு அளவில்லை. இந்தப் புயல் பெஜவாடா, ஒங்கோல் முதலிய விடங்களிலுமிருந்திருக்கிறது. சென்னைக்கு 25 மைலுக்கப்பாலுள்ள எம். எஸ். எம் ரயில்வே நிலையங்களின் கூரைகளெல்லாம் காற்றில் பறந்தோடின. அந்நிலையங்களிலிருந்த ரயில்வே உத்தியோகஸ்தர் குடும்பங்களுக்கு மிக்க சேதம்: ரயில்வே லயனுக்கருகிலிருந்த பல கிராமங்களும் வீடுகளும் பாழ்பட்டன. சிலர் இறந்தனர். ரயில்பாதைகளின் மேலெல்லாம் பெரு மரங்களும் தந்திக் கம்பங்களும் பெயர்ந்து விழுந்திருந்தன. இதனால் தந்திப்போக்கு வரவும் ரயில் போக்குவரவும்தடைப்பட்டிருந்தன. பிரயாணிகள் பெருந்துன்புற்றனர். வடபுறத்தில் பல விடங்களில் புயலினால் பெருஞ் சேதமுண்டாயிற்று. அதில் நெல்லூர் ஜில்லாதான் அதிகம் பாதிக்கப்பட்டு நகரமே பார்ப்பதற்கு கோரமாகக் காணப்படுகிறது. பலர் வீடின்றியும் உணவின்றியும் தவிக்கின்றனர். இப்போது பலர் காலரா முதலிய நோய்களுக்கும் இரையாகின்றனராம்.

o o o

சென்ற 4, 5வ களில் தில்லியில் மகாத்மா ஹன்ஸ் ராஜரின் அக்கிராசனத்தின் கீழ் அகில இந்திய ஆரியர் காங்கிரஸ் நடைபெற்றது. சுமார் மூவாயிரம் பிரதிநிதிகளும் நடவடிக்கைகளைக் கவனிக்க ஆயிரக் கணக்கானவர்களும் வந்திருந்தார்கள். இரண்டு நாள் ஊர்வலம் விடுவதாகத் தீர்மானித்திருந்தனர். ஒரு நாள் ஊர்வலத்துக்கு மட்டுமே மாஜிஸ்ட்ரேட் அநுமதிதந்தார். இதைக் கண்டிப்பதற்கு அறிகுறியாக முதல் நாள் ஊர்வலமும் கைவிடப்பட்டது. பிரதிநிதிகள் பலர் சத்தியாக்கிரஹம் செய்ய வேண்டுமென்று வலியுறுத்தினர். அதன்மேல், ஆரியர்களின் சமூக சமய உரிமைகளைப் பாதுகாப்பதற்காக ஒரு கமிட்டி ஏற்படுத்துவதென்றும், இக்கமிட்டியார் பதினாயிரம் தொண்டர்களும், 50,000 ரூபாவும் சேர்க்க வேண்டுமென்றும், தொண்டர்கள் உயிர் விடவும் தயாராயிருப்பதாக வாக்குறுதி செய்ய வேண்டுமென்றும், சத்தியாக்கிரஹம் முதலிய எல்லா முறைகளையும் கையாள வேண்டு மென்றும் தீர்மானிக்கப் பட்டன. கமிட்டியின் தலைவர் ஸ்ரீ நாராயணஸ்வாமி, பாய் பரமானந்தர் பண்டித இந்திரர், லாலா தேசபந்து குப்தா, பண்டித இராமச் சந்திரர் முதலியோர் அங்கத்தினர். மற்றும், கல்கத்தா ஒற்றுமைத் தீர்மானத்தில் மதமாற்றம் சம்பந்தமான பகுதியை ஆதரித்தும், பசுவதை, மசூதிக்குமுன் மேளம் இவை சம்பந்தமான பகுதிகளை நிராகரித்தும், ஹிந்து தலைவர்களைக் கொலை செய்யப்படுதற்கு ஒரு சதியாலோசனை இருப்பதாக ஊகிக்க இடமிருக்கிறதென்றும், இதை ஆராய ஒரு விசாரணைக் கமிஷன் நியமிக்கப் பட வேண்டுமென்றும், தீண்டாமைதொலைய வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேறின. காங்கிரஸ் பந்தலில் ஹிந்துக்களல்லாதவர்கள் சிலர் சுத்திக்கிரியை செய்யப்பட்டு ஹிந்து மதத்தில் சேர்க்கப்பட்டனர்.



# உடல் சுகம் பேணுதல் எப்படி?

## சில பிரபலஸ்தரின் அபிப்பிராயங்கள்

உடல் சுகம் பேணுதல் எப்படி என்பது குறித்து, வாழ்க்கையின் வெவ்வேறு துறைகளில் கீர்த்தி பெற்ற சில மேனாட்டுப் பிர முகர்களின் கருத்துக்களை "டிட் பிட்ஸ்" பத்திரிகை வெளியிட்டிருக்கிறது. அவற்றுள் சிலவற்றை நாம் மொழி பெயர்த்துத் தருகிறோம் :-

### ஜீனி டன்னி

### 'எளிய உணவே சிறந்தது'

டெம்ப்ஸி - டன்னி குத்துச்சண்டைகளைப்பற்றிப் பத்திரிகைகளில் அடிக்கடி வரும் செய்திகளை நேயர்கள் கவனித்திருக்கலாம். இவ்விருவரும் குத்துச் சண்டையில் உலகப் பிரசித்தி பெற்றவர்கள். இவர்களில் ஜீனி டன்னி என்பார் தாம் உடல் சுகம் பேணும் முறையைப்பற்றிக் கூறுவதாவது:-

"நான் சாப்பிடும் உணவோ, என் வாழ்வு முறையோ, சண்டைக்காரனுக் குரியதாய்க் காணப்படாது. நான் வழக்கமாய் அருந்தும் உணவு வருமாறு :—

காலை—நிறைய ஆரஞ்சுப்பழச் சாறு; முழுக்கோதுமை மா ரொட்டி; பச்சைக்கறிகாய்கள்.

சிற்றுண்டி—சுத்த ஜலம்.

மாலை—தினந்தோறும் வெங்காயக் குழம்பு; நிறையக் கறி காய்கள்; அபூர்வமாகச் சிறிதளவு மாமிசம்.

தேயிலை, காப்பி, மதுவகைகள் நான் அருந்துவதில்லை. திறந்த வெளியிலும் காடுகளிலும் ஏகாந்தமாக அலைந்து திரிவதில் எனக்குப் பிரியம் அதிகம்.

இளைஞர்களுக்கு நான் சொல்லும் புத்திமதியாவது:— கடவுளுக்குப் பயந்து தூய எளிய வாழ்வு நடத்துங்கள்; சுருட்டுகள், ஆபாசப் பேச்சு முதலியவற்றை ஒழியுங்கள்; பாலும் கறி காய்களும் நிரம்பச் சாப்பிடுங்கள்; நன்றாகத் தூங்குங்கள். உங்கள் உடம்பு பூரண சுகத்துடன் திடமாயிருக்கும்.

எதிர்பாராத அசந்தர்ப்பம் நேர்ந்தாலன்றி நான் இரவில் அதிக நேரம் கண் விழிப்பதில்லை. நெடுகவே நிதானமான வாழ்வு நடத்தி வருவதால்தான் என் உடல் சண்டை போடுவதற்குத் தகுந்ததா யிருக்கிறது. ஒவ்வொரு நாளும் விடாமல் தேகாப்பியாசம் செய்து வருகிறேன். என்னுடைய முக்கியமான தேகாப்பியாசங்கள் காலை வேளையில் நீண்டதூரம் நடத்தலும், உடம்பை வளைத்து நிமிர்த்தலுமேயாகும்.

கலியாணம் செய்துகொள்ளும் உத்தேசம் தற்போது எனக்குக் கிடையாது."

### டக்ளாஸ் பேயர்பாங்ஸ்

### 'சேரிப்பும் சிரிப்பும் வேண்டும்'

சினிமா உலகில் பெயர்பெற்ற டக்ளாஸ் பெயர் பாங்ஸ் (Douglas Fairbanks) என்பார் கூறுவதாவது:—

"ஒரு மனிதன் நல்ல ஜீரணசக்தியுள்ளவனும் மனதைக் கட்டுக் குட்படுத்தும் சக்தியுள்ளவனுயும் இருந்தால் அவன் வாழ்க்கையில் வெற்றி பெற்றவன் என்று நான் கூறுவேன். நல்ல ஜீரணசக்தியும், சாதாரண மூளையும் வேண்டுமா? அல்லது மெலிந்த உடலும் பெரிய மூளையும் வேண்டுமா என்று என்னைக் கேட்டால், நல்ல சேரிப்பும், சாதாரண மூளையும் போதுமென்று சொல்வேன். மூளைத்திறமையால் அரியதோர் காரியத்தைச் செய்து முடித்தல் சாமான்யமான தன்று. அதில் ஒருவன் மிகுதியான இன்பம் அடையலாம். ஆனால் நல்ல தேகசுகமுடையவன் அதனினும் அதிக இன்பம் பெறுவதற்கு வழியுண்டென்பது என் அபிப்பிராயம்.

நமது உடல், மனம் இரண்டுக்கும் தினந்தோறும் பயிற்சி கொடுக்க வேண்டும். என்னைக் கேட்டால் அபாயங்களுக்குள்ளாவதே சிறந்த தேகப்பயிற்சியும், மனப்பயிற்சியுமாகும் என்று சொல்வேன். அதனால்தான் நான் அடிக்கடி அபாயங்களுக்குத் துணிந்து பல முயற்சிகளில் இறங்குகிறேன்.

உடல் சுகம் பேணுதற்குச் சிரிப்பு ஒரு முக்கிய சாதனமாகும். சந்தர்ப்பம் நேர்ந்த போதெல்லாம் நிரம்பச் சிரிப்பதற்கு நான் பழக்கம் செய்துகொண்டுள்ளேன். நாலு மனிதர் சேர்ந்திருக்கும்போது சிரிப்பானது அவர்களை உற்சாக புருஷர்களாய் வைத்திருக்கிறது. மனச்சோர்வைப்போல் மனிதர்களுக்குத் தீமையயப்பது வேறில்லை. சிரிப்பு மனச்சோர்வை ஒட்டி விடுகிறது.

குழந்தைகளை நிதானமான வாழ்வு முறையில் பழக்கவேண்டும். இடைவிடாத சந்தோஷமும், சுகமும் உள்ள வாழ்க்கை தனக்குரியது என்று சிறுவன் எண்ணுதற்கு விடக்கூடாது. வாழ்வில் ஏற்றத் தாழ்வுகள், சுகதுக்கங்கள், கசப்பு தித்திப்புப் பொருள்கள் எல்லாம் உண்டென்று அறிந்து அவன் வாழ்வை நேசிக்கச் செய்யவேண்டும். அப்போதே கஷ்டம் வருங்கால் அவன் அதற்கு ஈடு கொடுக்கத் தகுதியுள்ளவனுயிருப்பான். (உணவுக்கு ஊறுகாயைப்போல் வாழ்வுக்குக் கஷ்டங்கள் அவசியம்) என்று அவன் உணர்ந்து உற்சாகமாகத் தூதிர்ஷ்டங்களை எதிர்த்துப் போராடுவான்."

### ஸூஸேன் லெங்ளன்

### 'இரண்டு வேளையே உண்கிறேன்'

டென்னிஸ் பந்தாட்டத்தில் பெயர்பெற்ற ஸூஸேன் லெங்ளன் என்னும் மாது கூறுவதாவது :—

"உடல் சுகத்திற்கென்று நான் தனியே முயற்சி எதுவும் செய்வதில்லை. ஆனால் எப்போதும் உணவுகொள்வதில் சாக்கிரதையாயிருந்துவருகிறேன். நான் மிதமாகவே சாப்பிடுகிறேன். இனிப்பான பணியாரங்கள், கொழுப்புள்ள பதார்த்தங்கள், மாமிசம் முதலியவை சாப்பிடுவதில்லை. எளிய உணவே சிறந்தது என்று அநுபவத்தில் கண்டிருக்கிறேன். மது வகைகளும் நான் குடிப்பதில்லை.

டென்னிஸ் ஆடும் நாட்களில் தினம் இரண்டு வேளையே சாப்பிடுகிறேன். பிற்பகலில் விளையாடுவதாயிருந்தால் ஆடத் தொடங்குவதற்கு இரண்டு மணிக்குமுன்பு ஒருமுறையும், விளையாட்டுக்குப்பின் இளைப்பாறிவிட்டு ஒரு முறையும் சாப்பிடுகிறேன். இரவில் விளையாடுவதாயிருந்தால் காலைப் போஜனமும், பிற்பகலில் சிற்றுண்டியும் அருந்துகிறேன். அவ்வளவுதான். டென்னிஸ் ஆட்டமே எனக்குச் சிறந்த தேகாப்பியாசமாயிருக்கிறது."



Bleed through

# சேலம் ஜில்லா அரசியல் மகாநாடு

## நிறைவேறிய தீர்மானங்கள்

சேலம் ஜில்லா மூன்றாவது அரசியல் மகாநாடு சென்ற சனி, ஞாயிறுகளில் சேலம் எலெக்ட்ரிக் தியேட்டரில் ஸ்ரீமான் வ. உ. சிதம்பரம்பிள்ளை அவர்களின் அக்கிராசனத்தின் கீழ்ச் சிறப்பாக நடைபெற்றது. மகாநாட்டுக்கு டாக்டர் வரதராஜுலு நாயுடு, ஸ்ரீமான்கள் ஈ. வே. இராமசாமி நாயக்கர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார், பனகால் ராஜா, பி. சிவராவ், ஏ. இராமசாமி முதலியார், திவான்பகதூர் குமாரசாமி ரெட்டியார், டி. கே. சிதம்பரநாத முதலியார், ராவ் பகதூர் எல்லப்ப செட்டியார், தம்மண்ண செட்டியார் (வரவேற்பு சபைத்தலைவர்) முதலிய பிரமுகர்கள் பலர் விஜயம் செய்திருந்தனர். பின் வரும் தீர்மானங்கள் நிறைவேறின:—

"சேலம் ஜில்லாவில் ஒரு பாகத்துக்கு அவசியம் விவசாயத்துக்காக மேட்டூர் தேக்கத்திலிருந்து தண்ணீர் சப்ளை செய்யப்பட வேண்டுமாய் சர்க்காரை இம்மஹாநாடு கேட்டுக்கொள்ளுகிறது."

"கிராமங்களில் அதிகமான பள்ளிக்கூடங்களும், சித்த வைத்திய ஆஸ்பத்திரிகளும் ஸ்தாபிக்கப்பட வேண்டுமென்றும், ஆதி திராவிடக் குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடங்களில் சம்பளம் ரத்து செய்யப்படவேண்டுமென்றும் சர்க்காரை இம்மகாநாடு வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறது."

"ஹிந்து குடும்பங்களில் பெண்களுக்கும் சொத்தில் ஒருபாக உரிமை யிருக்கும்படி கூடிய சீக்கிரம் சட்டமியற்றப்பட வேண்டுமென்று இம்மகாநாடு அபிப்பிராயப்படுவதுடன், ஹிந்து தலைவர்களை மேற்படி விஷயத்தில் கவனஞ் செலுத்தித் தக்க மசோதா ஒன்றைச் சட்டசபையில் உடனே கொண்டுவர வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறது."

"இந்திய சட்டசபையில் கொண்டுவரப்பட்டிருக்கும் பெண்கள் விவாக வயதை நிர்ணயிக்கும் மசோதாவை இம்மகாநாடு பூரணமாய் ஆதரிப்பதுடன், இந்தியாவுக்கு நன்மை பயக்கக்கூடிய மேற்படி மசோதாவை சர்க்காரும், இந்திய சட்டசபை அங்கத்தினர்களும், தலைவர்களும் ஆதரித்து நிறைவேற்றி வைக்க வேண்டுமாய்க் கேட்டுக்கொள்ளுகிறது."

"தேச மஹாஜனங்கள் ஒன்றுபட்டு முன்னேற்றமடையவும், இந்தியா கூடிய சீக்கிரம் பூரண சுயராஜ்யமடையவும் தேசத்திலிருந்து வரும் வைதிகக்கொடுமைகள் ஒழியவும், ஜாதி வேற்றுமைகளும் அவற்றால் உண்டாகும் தீமைகளும் தொலையவும், இந்திய தேசிய மஹாசபை, அதிக வேலை செய்ய வேண்டுவது மிகவும் அவசியமென்றும், இந்தவேலையில் காங்கிரஸ்காரர்கள் ஈடுபடுவதாக வாக்குறுதி வாங்கப்படவேண்டிய முறையில் காங்கிரஸ் விதிகள் திருத்தப்பட வேண்டுமென்றும் இம்மஹாநாடு அபிப்பிராயப்படுகிறது"

"சமீபத்தில் நியமிக்கப்படப் போகும் ராயல் கமிஷன் பார்லிமெண்டு அங்கத்தினர்களை மட்டுமே கொண்டதாயிருக்குமென சொல்லப்பட்டு வருவதைக் கேட்டு இம்மஹாநாடு அதிகம் விசனிக்கிறது. உண்மை இந்தியப் பிரதிநிதிகள் போதிய அளவு இல்லாத எந்தக் கமிஷனையும் இந்தியா ஏற்றுக்கொள்ள முடியாதென இம்மஹாநாடு தெரிவிக்கிறது."

"'சூத்திரன்' என்றபதம் சென்னை சர்க்கார் ரிக்கார்டுகளில் உபயோகிக்கப்பட்டு வருவது பிராமணரல்லாதாரின் சுயமதிப்பையும் கௌரவத்தையும் அதிகம் பாதிப்பதால் மேற்படி பதத்தை சகல தஸ்தவேஜிகளிலும் ரிகார்டுகளிலுமிருந்து உடனே எடுத்துவிடவேண்டுமென்றும், இனி மேற்படி பதத்தை எந்த சர்க்கார் தஸ்தவேஜியிலும் ரிக்கார்டிலும் உபயோகிக்கக் கூடாதெனக் கண்டிப்பாய் உத்தரவு உடனே பிறப்பிக்க வேண்டுமாய் சென்னை சர்க்காரை இம்மஹாநாடு வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறது."

"தமிழ்நாடு மாகாண காங்கிரஸ் நிர்வாக கமிட்டியார் சுப்பர்வைசிங் போர்டுகளை நியமித்துச் சகலரும் காங்கிரஸ் அங்கத்தினர்களாகச் சேரமுடியாமல் தடை செய்தும், ஜில்லாக் கமிட்டிகளிலும் தாலூகா கமிட்டிகளிலும் ஒரு சிறு கக்ஷியினர் சூழ்ச்சிகள் செய்ய இடங்கொடுத்தும் வருவதை இம்மஹாநாடு பலமாகக் கண்டிக்கிறது."

"டாக்டர் பெஸண்டு அவர்கள் தயாரித்திருக்கும் காமன்வெல்த் ஆப்இந்தியா மசோதாவைப் பரிசீலனை செய்ய அகில இந்தியக் காங்கிரஸ் ஒரு கமிட்டியை நியமிக்கவேண்டுமாயும், மேற்படி மசோதாவை தேச முழுதும் ஒப்புக்கொள்ளக் கூடியபடி அவசியமான திருத்தங்களிருந்தால் அவற்றைச் செய்யும்படியும் இம்மஹாநாடு காங்கிரஸுக்குச் சிபார்சு செய்கிறது. இந்த விஷயமாய் டாக்டர் பெஸண்டு செய்திருக்கும் அரிய வேலையை இம்மஹாநாடு பாராட்டுகிறது."

"இந்நாட்டுப் பாமர ஜனங்களை அடிமை வாழ்வில் அமுக்கிக் கொண்டிருக்கும் வருணாசிரமதர்மத்தைத்தமது சமீப தென்னாட்டு விஜயத்தில் மகாத்மா காந்தி போதித்ததற்காக இம்மஹாநாடு வருந்துகின்றது."

"பிறப்பினால் உயர்வு தாழ்வுஎன்றமமதை, தீண்டாமை இவற்றை ஒழித்துப்பாமரஜனங்களைக் கைதூக்கி விட்டுச் சகல ஜனங்களுக்குள்ளும் சுயமதிப்பு, சமத்துவம் இவற்றை நிலைநாட்டப்பலமாய்ப்பிரசாரஞ்செய்யும்படி இம்மஹாநாடு எல்லா ஹிந்துக்களையும் கேட்டுக்கொள்கிறது. அவசியம் நேர்ந்தால் இது விஷயமாய் சத்தியாக்கிரஹ இயக்கமும் மும்முரமாய் நடத்தவேண்டுமென்றும் இம்மஹாநாடு அபிப்பிராயப்படுகிறது"

"ஹிந்து கோயில்களில் விக்ரஹங்களுக்குப் பூஜை செய்யும் உரிமையை சிலர் பறித்துக்கொண்டு ஹிந்துக்களில் பெரும்பாலரின் உரிமைகளை இழக்கும்படி செய்யப்பட்டிருப்பதால், மேற்படி உரிமைகளை ஒருசிலர்மட்டும் அனுபவியாமல்சகலஹிந்துக்களும் அனுபவிக்கும்படியும், கோயில்களில் சகல இடங்களுக்கும் சகல ஹிந்துக்களும் செல்லும்படியும் ஹிந்து தலைவர்கள் வேண்டிய ஏற்பாடுகள் செய்யவேண்டுமாய் இம்மஹாநாடு வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறது."

(ஏ) "கௌஹத்தி காங்கிரஸ் தீர்மானங்களுக்கு நேர் விரோதமான உத்தரவுகள் அகில இந்திய காங்கிரஸ் காரியக் கமிட்டியார் சட்டசபைகளிலுள்ள காங்கரஸ் அங்கத்தினர்களுக்குக் கொடுத்திருப்பதை இம்மகாநாடு பலமாய்க் கண்டிக்கிறது."

(பி) "சென்னைக் காங்கிரஸ்காரர்களில் சிலர் உத்தியோகங்கள் ஏற்றுக்கொள்வதற்கு அனுகூலமா யிருப்பதை அறிந்து இம்மகாநாடு காங்கிரஸ் கட்சியினர் உத்தியோகங்களை யேற்றுக்கொள்வது சென்ற தேர்தலில் அவர்கள் ஜனங்களுக்குக் கொடுத்த வாக்குறுதிகளை மீறி நடத்தலாகுமென்று இம்மகாநாடு அபிப்பிராயப்படுகிறது. அடுத்த காங்கிரஸில் உத்தியோகம் ஏற்றுக்கொள்வதில் ஏற்பட்டிருக்கும் தடை நீக்கப்படுமானால், சட்டசபைகளிலுள்ள காங்கிரஸ்காரர்கள் தங்கள் பதவிகளை ராஜீநாமா செய்துவிட்டு மறுதேர்தலுக்குப் புதிய திட்டப்படி நிற்கவேண்டுமென இம்மஹாநாடு தீர்மானிக்கிறது.

"தேசத்தில் ஜாதிமத வித்தியாசங்களும் வேற்றுமைகளும் இருந்துவரும்வரை சகல ஜாதிமதத்தினருக்கும் போதிய பதவிகள் ஸ்தானங்கள் கிடைக்க ஏற்பாடு செய்யப் படவேண்டுமென இம்மகாநாடு அபிப்பிராயப்படுகிறது."

"தென்னாட்டில் ஹிந்துக்கோயில்களுக்குப் பெண்களைப் பொட்டுக்கட்டும் அனாசார வழக்கத்தை ஒழிக்க வேண்டுமாய் இம்மகாநாடு தீர்மானிப்பதுடன் மேற்படி விஷயமாய்ச் சென்னைச் சட்டசபையில் டாக்டர் ஸ்ரீமதி முத்துலக்ஷ்மி அம்மாள் கொண்டு வந்திருக்கும் மசோதாவைச் சகல அங்கத்தினர்களும் முழுமனதுடன் ஆதரிக்கவேண்டுமாய் இம்மகாநாடு வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறது. பரிசுத்த வாழ்விற்குப் பங்கம் விளைவிப்பதும், காலப்போக்கிற்கு முற்றிலும் முரண்பட்டதுமான தேவதாஸி ஸ்தாபனத்தை ஒழிக்க ஸ்ரீமதி முத்துலக்ஷ்மி செய்துவரும் முயற்சிக்கு அறியாமையாலும் சுயநலங்கருதியும் சிலர் செய்துவரும் எதிர்ப் பிரசாரத்தை இம்மஹாநாடு பலமாகக் கண்டிக்கிறது."

மஹாநாட்டில் செய்யப்பட்ட தீர்மானங்களை அனுஷ்டானத்தில் அமுலுக்குக் கொண்டுவர வேண்டிய ஏற்பாடுகள் செய்யும் பொருட்டு டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு, ஸ்ரீமான்கள் ஜி. இராமச்சந்திர நாயுடு, பவானிசிங், கந்தசாமி பிள்ளை, தம்மண்ண செட்டியார் முதலிய பலரடங்கிய கமிட்டியொன்று நியமிக்கப்பட்டது.

—"தமிழ்நாடு"

## மதிப்புரை

### காதற்கடிதங்கள்

"காதற்கடிதங்கள்" என்னும் பெயர் வாய்ந்த நூலொன்று எமது பார்வைக்கு வந்தது. இக்கடிதங்கள் தனவைசிய நாட்டினின்றும் வெளிவரும் "ஊழியன்" என்னும் பத்திரிகையில் முறை முறையே வெளிவந்தன. தனவைசியர்கள் வெளி நாடுகளுக்குச் செல்லும்போது இல்லக் கிழத்தியுடன் ஏகுதல் இல்லை. இவ்வழக்கத்தால் பலதிறக் கேடுகள் விளைந்து வருவது கண்ட அவ்வகுப்பு இளைஞர் பலர் தம்மவர் வெளிநாடு நோக்கும்போதும் வாழ்க்கைத் துணையுடன் செல்லுதல்வேண்டுமென்று கிளர்ச்சிசெய்து வருகிறார். அக்கிளர்ச்சியின் பயன்களுள் இக் "காதற்கடிதங்கள்" என்னும் வெளியீடுமொன்று. பிரிவு குறித்து இருவர் எழுதிக்கொள்ளுங் கடிதங்களில், குறைபாடு களையவல்ல கருத்துக்கள் மலிந்து கிடக்கின்றன. உரை நடையும் பிறவும் செவ்வனே அமைந்திருக்கின்றன. பொதுவாகப் பலர்க்கும் சிறப்பாகத் தனவைசியர் கட்கும் பயன்படுமாறு வெளிவந்த "காதற் கடிதங்கள்" என்னும் நூலைத் தமிழ்மக்கள் ஆதரிப்பார்களாக. விலை அணா கஉ; விலாசம்: வள்ளுவர் நிலயம், காரைக்குடி.

### தமிழ்ப் பூங்கொத்து

இந்நூல் வரப் பெற்றோம். இதன்கண் இரண்டு அறிஞர்கள் சொற்பொழிவுகள் அடங்கி யிருக்கின்றன. ஒன்று "சைவ சமய குரவர்" என்பது; மற்றொன்று "ஜீவகாருண்யமும் புலாலுண்ணாமையும்" என்பது. இவ்விரண்டும் முறையே திருவாளர் கு. க. சதாசிவம் பிள்ளையவர்களாலும், அவரது இளந் தந்தையார் காலஞ்சென்ற திருவாளர் அண்ணாமலைப் பிள்ளையவர்களாலும் நிகழ்த்தப் பெற்றன. நடையும், பொருளும், எடுத்துக் காட்டுகளும் நன்கு யமைந்திருக்கின்றன. தமிழ்ப் பூங்கொத்து சைவ உலகத்துக்குப் பயன் தருவது. விலை அணா 3. விலாசம்: கு. க. சதாசிவம் பிள்ளை, "அண்ணாமலையார் வாசக சாலை", அம்மளூர், குன்னலூர் போஸ்ட், தஞ்சை ஜில்லா.

### அறநூல்

ஸ்ரீ சுத்தானந்த பாரதியாரால் யாக்கப் பெற்ற அறநூல் மூலமும் உரையும் வரப் பெற்றோம். இந்நூலுக்குத்திரு. வி. கலியாண சுந்தர முதலியார் சாற்றுக்கவி தந்துள்ளார். அக்கவி வருமாறு:—"அறமாவ தென்னே அறமாவ தென்னே - அறுத்தல் மாசினை அறம தாகும் - அறமே ஆக்கம் அறமே உண்மை - அறமே கடவுள் அறமே எல்லாம் - அன்று கல்லால் நின்றதும் அறனே - பின்னைப் போதியில் மன்னிய ததுவே - அச்செழும் பொருளே பச்சிளந் தமிழில் - ஊருணி புரைந்து பாருணத் திரண்டதும் - இன்றதைச் சூழ நன்றுகொள் புலவன்-அறவோன் அந்தணன் அறவோன் தோழன் - சுத்தா னந்தன் சுத்தா னந்த - பாரதிப் பெயரோன் மாரதன் அன்பால் - இறைவே ராக நிறைமன ருக - மன்குடி கல்வி முன்முயல் பொறைவழி - பாடு முதற்பல கோடு கவட்டுடன் - ஈகை உழவு வாகைப் பொருளே - தொழின்மணம் முதலிய தழையிலை அரும் பலர் - காய்கனி யாய்க்கவி வேய்நிழல் பரப்ப - அறமாம் நிரைநிரை செறிய நூலெனுந் - தமிழ்ப்பொழில் அமைத்தான் அமிழ்தம் - புலவீர் ஈண்டுக புலன்கொள நுகரவே" இதனால் நூலின் பொருளும் பிறவும் நனிவிளங்கும். விலை அணா 12. விலாசம்: எஸ். கணேசன், திருவல்லிக்கேணி, சென்னை.

### ஏசுநாதர் சரிதை

ஏசுநாதர் சரிதை உலகில் பரவியிருப்பது போல வேறொருவர் சரிதை பரவியிருப்பதாகத் தெரியவில்லை. சத்தியாக் கிரகத்துக்குப்பெருங் குருநாதர் கிறிஸ்துஎன்றுசொல்வது மிகையாகாது. ஏசுபெருமான் வரலாறு குறித்துத் தமிழில் உரை நடையில் பன்னூலும், பாநடையில் சில நூலும் அறிஞரால் இயற்றப்பட்டிருக்கின்றன. இதுபோழ்து ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் ஏசு சரிதத்தை இனிய தெள்ளிய தீந்தமிழில் பாடியுதவியுள்ளார். மலைப்பொழிவு அகவற்பா மனதைக் கவர்கிறது. மனப்பாடஞ் செய்தற்குரிய முறையில் ஏசு சரிதம் யாத்த பாரதியார்க்கு நமது நன்றியுரியதாக. இஃதனைய நூல் பல பாரதியார் வாயிலாக வெளி வருமென எதிர்பார்க்கிறோம். விலை அணா 6. விலாசம்: கிறிஸ்டியன் லிடரேட்சர் ஸொஸைடி, மதராஸ்.

Printed and Published by T. V. Kalyanasundaran (Editor) at the Sadhu Press, 12-Ganapathi Mudali St., Royapettah, Madras.

